4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798:

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 22-4-73 ஞாயிறு (மலர் 94

## தோழர் என். சங்கரய்யா வேட்பு மனு தாக்கல்

திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளராகப் போட்டியிடும் தோழர் என். சங்கரய்யா, 24—4—73-ல் மதுரை கலெக்டர் அலுவலகத்தில் வேட்பு மனு தாக்கல் செய்கிறார்.

24-ம் தேதி காலை 9-30 மணிக்கு, மதுரை மேல மாசி வீதி—வடக்குமாசிவீதி, சந்திப்பிலிருந்து, வேட்பு மனு தாக்கல் செய்ய கலெக்டர் அலுவலகத்திற்குப் பெரும் ஊர்வலம் புறப்படும். கட்சித் தோழர்களும் பொதுமக்களும், கலந்துகொள்ள வேண்டுகிறோம்,

— மதுரை நகர்க்குழு,
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி.



## இன்று லெனின் பிறந்த நாள்

ஆண்டான் - அடிமை எனும் அடிமை விலங்கினை உடைத்து

மனிதனை மனிதன் சுரண்டுவதை ஒழித்து இல்லை என்ற சொல்லை இல்லை என்றாக்கிட சோஷலிசப் புத்துலகுக்கு வழி காட்டிய மேதை

உலகப் பாட்டாளி வர்க்கத்தின் ஒப்பிலாத் தலைவர்

### மாமேதை லெனின் அவர்களின் 103-வது பிறந்த நாள்

இன்று 22-4-73.



"அரசு அதிகாரத்தை பூர்ஷ்வா வர்க்கம் வகித்து மக்களின் வெவ்வேறான வர்க்கங்களை தேர்தல்களில் பங்கு கொள்ளுமாறு அனுமதிக்கும் வரை, அந்தத் தேர்தல்களில் எல்லா மக்களிடையேயும்—பாட்டாளிகளிடம் மட்டுமல்ல—பிரச்சாரம் செய்யும் நோக்குடன் நாம் பங்கு எடுப்பது நமது கடமையாகும்.

பூர்ஷ்வாக்களின் நிதிமோசடி முதல் எல்லாவிதமான லஞ்சங்களையும் மூடிமறைப்பதற்கு ஜனநாயகத்தைப் பற்றிய வாய்ச்சொற்களை பயன்படுத்தி தொழிலாளிகளை வஞ்சிப்பதற்குரிய ஒரு சாதனமாக நாடாளுமன்றம் இருந்து வருகிறவரை இந்நிறுவனத்தில்—அது மக்களின் சித்தத்தை பிரதிபலிப்பதாக கூறுகிறார்கள். ஆனால் உண்மையில பணக்காரர்கள் மக்களை ஏமாற்றுவதையே அது மூடி மறைக்கிறது — கம்யூனிஸ்டுகளாகிய நாம் இந்நாடாளுமன்ற நிறுவனத்திலிருந்து அவர் தம் வஞ்சனையை முரணின்றி அம்பலப்படுத்துவது அவசியம்.

தொழிலாளர்களுக்கு எதிராக முதலாளி பக்கம் மாறிப் போகிறரென்னர் கூட்டத்தின் (ஆஸ்திரிய நாட்டில் அன்று தேன்றிய தொழிலாளி வர்க்கத்திற்கு துரோகமிழைத்து விட்டு ஓடிய ஓடுகாலிகளின்) ஒவ்வொரு செயலையும் அம்பலப்படுத்துவது நமது கடமையாகும்.

நாடாளுமன்றத்திலே, பூர்ஷ்வா கட்சிகளுக்கும் குழுக்குகளுக்கும் இடையேயுள்ள உறவுகள் அடிக்கடி வெளித்தோன்றும் வாய்ப்புகளும் உள்ளன,

பூர்ஷ்வா சமுதாயத்தில் உள்ள எல்லா வர்க்கங்களிடையேயும் நிலவும் உறவுகளையே அவை பிரதிபலிக்கின்றன.

எனவே தான், பூர்ஷ்வா நாடாளுமன்றத்திலே கம்யூனிஸ்ட்களாகிய நாம வாக்கங்களின பால் பல்வேறு கட்சிகள், கடைப்பிடிக்கும் போக்குகளை அம்பலப்படுத்தும் வாய்ப்புஉண்டு பண்ணைத் தொழிலாளிகளின்பால் நிலப்பிரபுக்கள கடைப்பிடிக்கும் போக்குகளையும், ஏழை விவசாயிகள் பால பணக்கார விவசாயிகள் கடைப்பிடிக்கும் போக்குகளையும், அலுவலக ஊழியர்கள் பால், சிறு உடைமையாளர்கள் பால் பெரும முதலாளிகள் கடைப்பிடிக்கும் போக்குகளையும் அவற்றில் பொதிந்துள்ள வர்க்க உண்மைகளையும் நாம் மக்களுக்கு எடுத்து விளக்கிக் கூறவேண்டும்.

முதலாளிகளின் கேடுகெட்ட நாசூக்கான தந்திரங்கள் எல்லாவற்றையும் புரிந்து கற்றுக்கொள்ளவும் குட்டி பூர்ஷ்வாவர்க்கத்தினர்மீதும், பாட்டாளிவர்க்கமல்லாத உழைக்கும மக்கள் அனைவரின்மீதும் செல்வாக்கு செலுத்தவும பாட்டாளிவர்க்கம் தெரிந்து இருக்க வேண்டும். இந்தப்பள்ளிபயிற்சி இல்லாமல் பாட்டாளிவர்க்கச் சர்வாதிகார பொறுப்புகளை வெற்றிகரமாக பாட்டாளி வர்க்கம சமாளிக்கமுடியாது!"

—ஆஸ்திரியக் கம்யூனிஸ்ட்டுகளுக்கு லெனின் எழுதிய கடிதத்திலிருந்து.

எர்ணாகுளத்தில்

## வட வியட்நாம் பிரதிநிதிகளுக்கு வரவேற்பு

கொச்சி, ஏப். 20—

எர்ணாகுளத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் சி ஐ டி யூவின 2-வது அகில இந்திய மாநாட்டில் கலந்து கொள்வதற்காக வடவியட்நாம் பிரதிநிதிகளான டாக்டர் டோ-டை-தி-யென். என்-குயென்-வான்-ஹாங் ஆகிய இருவர் விமானத்தின் மூலம் 18-ம் தேதியன்று கொச்சிக்கு வந்து சேர்ந்தனா.

கொச்சி விமான நிலையத்தில் மாநாட்டுக்குவந்துள்ள தென்வியட்நாம் பிரதிநிதிகளான என்-குயென்-சி-ஞங் என்-குயென்-வான்-ஹோங் ஆகியோர வடவியட்நாம் பிரதிநிதிகளை மாலை அணிவித்து முகலில் வரவேற்றனர் அவர்களைத் தொடர்ந்து கேரள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக்குழு செயலாளரான தோழர் இ. கே. நாயனார், மாவட்டச் செயலாளர் தோழர் எம். எம். லோரன்ஸ், 'தேசாபிமானி' பத்திரிகை சார்பில் தோழர் பி கண்ணன்நாயர் கேரள விவசாயிகள் சங்கத்தின் சார்பாக தோழர் டி. கே, ராமகிருஷ்ணன் ஆகியோரும் வடவியட்னும்பிரதிநிதித் தோழர்களை மாலை அணிவித்து வரவேற்றனர்

இஸ்ரேலுக்கு

## ஐ. நா. பாதுகாப்புச் சபையில் கண்டனம்

### அமெரிக்கா முட்டுக்கொடுக்கும்

நியூயார்ச், ஏப் 19—

லெப்னன் மீது இஸ்ரேல் தாக்குதல் நடத்தியது குறித்து ஐ நா. பாதுகாப்புச் சபையில் கடுமையான விவாதம் நடந்தது. பெரும்பாலான நாடுகள் இஸ்ரேலுக்கு பலத்த கண்டனம் தெரிவித்தன,

இஸ்ரேலுக்கு இராணுவ, பொருளாதார உதவிகளில் ஓரளவு தடை விதிக்க வேண்டும் என்று ஐ நா. பாதுகாப்புச் சபையின் பெரும்பாலான உறுப்பினர்கள் வலியுறுத்தினர்கள்.

மேற்காசிய சிக்கலுக்கு நியாயமான ஒரு தீாவு ஏற்பட வேண்டுமானல், மேற்காசிய பிரச்னை மீது ஆய்வு செய்ய வேண்டும் என்று எகிப்து பிரதிநிதி வலியுறுத்தினர் இக்கருத்துக்கு இந்தியப் பிரதிநிதியும் ஆதரவு தெரிவித்துப் பேசினர்.

இது போன்று தடை செய்யும் தீர்மானம் எதுவும் வருமானல், அதைத் தடுத்து நிறுத்துவதற்கு தான் தனது ரதது அதிகாரத்தை நிச்சயமாக உறுதியாகப் பயன்படுத்தப் போவதாக அமெரிக்கா அறிவித்துள்ளது.

இஸ்ரேல் - லெபனன் பிரச்னை குறித்து மீண்டும் ஐ நா. பாதுகாப்புச் சபை கூடி விவாதிக்கும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

பாதுகாப்புக் கைதிகளை விடுதலை செய்ய

# நீதிமன்றம் உத்தரவு

## தீர்ப்பைமுடமாக்க இந்திரா ஆட்சிசதி

புதுடெல்லி, ஏப். 20—

1971-ம் வருடத்திய உள்நாட்டுப் பாதுகாப்பு பராமரிப்புச் சட்டம் செல்லாதென சுப்ரீம் நீதி மன்றம் நேற்று தீர்ப்புக் கூறியது. இதன் 17-ஏ. ஷரத்து அரசியல் சட்டத்துக்கு முரணனது எனத்தீர்ப்பளித்தது. அதனுல் மேற்கூறிய ஷரத்தின் அடிப்படையில் கைது செய்யப்பட்டவர்கள் விடுதலை செய்யப்படவேண்டும் என இந்திய அரசுக்கு சுப்ரீம் நீதி மன்றம் உத்திரவிட்டுள்ளது.

இந்த சுப்ரீம் நீதிமன்றத்துக்குமனு செய்துகொண்ட சாம்புநாத் சர்க்கார் உட்பட 6 அரசாங்க ஊழியர்களையும் விடுதலை செய்யுமாறு சுப்ரீம் நீதிமன்றம் உத்திரவிட்டுள்ளது.

இந்த சட்டத்தின் கீழ் மே வங்கததில் மட்டும 2600 அரசியல் கைதிகள் மே.வங்க சிறைகளில் வாடுகின்றனர். இவர்கள் அனைவரும் மேற்கூறிய உத்திரவின்படி உடனடியாக விடுதலை செய்ய வேண்டும். ஆனல் மேற்கு வங்க அரசு இரண்டொரு தினத்தில் சிலரை விடுதலை செய்யப் போவதாகவும். விடுதலை செய்த மறு நிமிடமே இந்தியத் தடுப்புக் காவல் சட்டத்தின்படி மீண்டும் கைது செய்து சிறையில் அடைக்கப் போவதாகவும் செய்திகள் வந்துள்ளன

### எதிர்ப்பு

சுப்ரீம் நீதிமன்றத்தின் தீர்ப்பை நேர்மையாக ஏற்க வேண்டும் என்றும் விசாரணையின்றி எதிர்க்கட்சியினரை சிறையில் வைக்கக் கூடாது என்றும் புதுடெல்லியில் இன்று நடைபெற்ற சர்வ கட்சி மாநாடு ஒன்றில் தீர்மானம் ஒன்று நிறைவேறியது.

### மத்திய அரசின் நிலை

இந்தச் சட்டம் செல்லுபடியாகாது என்று சுப்ரீம் நீதி மன்றம் தீர்ப்பளித்துவிட்டதாலும் உடனடியாக 2500 பேரை விடுதலை செய்ய வேண்டியது இருப்பதாலும் மத்திய அரசுக்கு சங்கடமான நிலைமை ஏற்பட்டுள்ளதாக கூறப்படுகிறது தீர்ப்பின் எல்லா அம்சங்களையும் மத்திய அரசு ஆழ்ந்து பரிசீலித்து வருவதாகவும் நிலைமையைச் சமாளிக்க தக்க நடவடிக்கை எடுக்க மத்திய அரசு பரிசீலனை செய்து வருவதாகவும் தெரிகிறது.

## நாம்பென்னைச் சுற்றி விடுதலைப் படைகள்

நாம்பென்; ஏப். 29—

கம்போடியத் தலைநகரான நாம்பென் நகரம் தேசிய விடுதலைப் படைகளின் முற்றுகைக்கு ஆளாகியுள்ளது, இசனல் ஆத்திரமுற்ற அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்கள் திமிரான நடவடிக்கைகளில் இறங்கியுள்ளனர்,

நாம்பென் பொம்மை அரசுக்கு அமெரிக்கா பெருமளவில விமானப்படை மூலம் உதவியளித்து, தென் வியட்நாம் படைகளை துணைக்கு அனுப்பிய போதிலும் விடுதலைப் படைகளின் முன்னேற்றத்தைத் தடுக்க இயலவில்லை. இம் முயற்சியில் அமெரிக்கா தோல்வியைச் சந்தித்துள்ளது,

### அமெரிக்கா வெறித்தாக்குதல்

விடுதலைப் படைகள் மேலும் முன்னேறி நாம்பெனுக்கு 5 கிலோ மீட்டர் தூரத்திற்கு அருகில் நிலை கொண்டுள்ளது;

### தோல்விக்கு மேல் தோல்வி

மேகாங் ஆற்றின் கரைகளிலிருந்து விடுதலைப்படைகளை விரட்டுவதற்கு எடுத்துக்கொண்ட முயற்சிகளிலும் அமெரிக்கா படுதோல்வி கண்டுள்ளது,

அந்த ஆற்றின் வழியே விடுதலைப் படைகள் தங்களுக்குத் தேவையான யுத்த தளவாடங்களைப் பயன்படுத்துவதுமன்றி. நாம

(4-ம் பக்கம் பார்க்க)

கண்ணிவெடிகளை அகற்றுவதை அமெரிக்கா நிறுத்தியது

## மீண்டும் குண்டுவீச்சுக்கு ஆயத்தமா?

ஹனுய், ஏப் 20—

வடவியத்நாம் கடற்கரைகளிலும் ஆறுகளிலும பயங்கரக் கண்ணி வெடிகளை முன்பு அமெரிக்கா வீசியதல்லவா? பாரிஸ் சமாதான ஒப்பந்தப்படி அவைகளை அகற்றுவதாக ஒப்புக்கொண்டு ஒரு சில கண்ணி வெடிகளை அகற்றியது இன்னும் பல்ல யிரக்கணக்கான வெடிகள் அகற்றப்படவில்லை. இதனல் வடவியத்நாம் துறைமுகங்களுக்கு வெளிநாட்டுக் கப்பல்கள் போகமுடியவில்லை.

இந்த நிலைமையில் கம்போடியாவில் நடைபெறும் யுத்தத்தை காரணம் காட்டி அதற்குவடவியட்னும் உதவுவதாககூறி வடவியத்நாமைப் பழிவாங்க அமெரிக்கா சிலநாட்களுக்கு முன்னர் மிரட்டுதல் விடுத்தது,

இன்று வெளியான ஒரு அறிவிப்பில் இப்பொழுது, பாரிஸ் ஒப்பந்தப்படி கண்ணிவெடிகளை அகற்றுவதையும் நிறுத்தி விட்டதாக அமெரிக்கராணுவத் தலைமை அறிவிக்கிறது, மீண்டும் வியத்நாம்மீது குண்டுவீச்சு நடத்தி பாரிஸ் ஒப்பந்தத்தைக் கிழித்தெறியும் சதியில் அமெரிக்கா இறங்கியுள்ளது.

## இந்தியாவுடன் பேச்சு வார்த்தை பாக் விருப்பம்

புதுடெல்லி, ஏப். 21—

195 பாக். கைதிகளைத் தவிர அனைவரையும் விடுதலை செய்யத் தயாராக இருப்பதாக இந்தியாவும் பாகிஸ்தானும் வெளியிட்ட கூட்டறிக்கையின் அடிப்படையில் இந்தியாவுடன் பேச்சு வார்த்தை நடத்தயாராக் இருப்பதாக பாக்கிஸ்தான் அறிவித்தது

## இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்

புதுடெல்லி, ஏப், 29—

திண்டுக்கல் நாடாளுமன்ற உபதேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளராக கரு சீமைச்சாமி போட்டியிடுவார் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

கடந்த தேர்தலில் இத்தொகுதியில்சுதந்திராவேட்பாளராக போட்டியிட்டு தோற்றவர்.

இவர் சுதந்திரா கட்சியிலிருந்து சிண்டிகேட்டுக்குப் போய், பின்னர் இந்திரா காங்கிரசில் சேர்ந்துள்ளார்:

இந்த முடிவை எடுப்பதற்காக நேற்று கூடிய பார்லிமெண்டரி போர்டு கூட்டத்தில் திருமதி இந்திரா காந்தி சவாண், சி சுப்பிரமணியம் மோகன் குமாரமங்கலம் ஆகியோர் கலந்து கொண்டனர் விசேஷ அழைப்பின் பேரில் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ராமையாவும் கலந்து கொண்டார்.

தனியாக தமிழ்நாட்டில் தங்களுடைய கொள்கையை விளக்க போட்டியிடுவது அவசியம் என்றும் வெற்றியடைவதற்கான வாய்ப்பு இருப்பதாகவும் ராமையா அறிவித்தார்.

இதுவரை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் என் சங்கரய்யா. திமுக சார்பில் பொன் முத்துராமலிங்கமும், இந்திரா காங்கிரஸ் சார்பில் சீமைச்சாமியும் அறிவிக்கப்பட்டுள்ளனர்.

காங்கிரஸ் முடிவை பற்றி எந்தக் கருத்தும் தெரிவிக்க அதிமுக தலைவர் எம் ஜி ராமச்சந்திரன் மறுத்து விட்டார். தனது கட்சி வேட்பாளரை இன்னும் ஓரிருதினங்களில் அறிவிப்பதாக கூறினர். சிண்டிகேட் வேட்பாளரும் இரு தினங்களில் அறிவிக்கப்படுவார்,

## டான்ஜானியா வர்த்தகப் பொருட்காட்சி

### இந்தியா கலந்துகொள்ளும்

புதுடெல்லி, ஏப். 20—

டான்ஜானியாவில் அடுத்த மாதம் நடக்கவிருக்கும் வர்த்தகப் பொருட்காட்சியில் இந்தியா கலந்துகொள்ளுகிறது. இதையொட்டி, மத்திய வர்த்தக துணை அமைச்சர் தலைமையில் உயர் அதிகாரிகள் 10 பேர் கொண்ட குழு ஒன்று டான்ஜானியா செல்லுமாம்.

பழிவாங்குதலை எதிர்த்து

## மதுரை பாங்க் ஊழியர் வேலைநிறுத்தம்

மதுரை, ஏப், 20—

பாங்க் ஆப் மதுரை ஊழியர்சங்ககூட்டுக் காரியதரிசி தோழர் சுந்தரத்தை பழி வாங்கும் நோக்குடன் வேலையிலிருந்து நீக்கப்பட்டதையும், தோழர் ஆறுமுகம் (டிரைவர்) ஆட்குறைப்பு என்ற பெயரில் பழிவாங்கப்பட்டதையும், மற்றும் நிர்வாகத்தின் தொழிலாளர் விரோதக்கொள்கையை எதிர்த்து தமிழ்நாடு வங்கி ஊழியர்சம்மேளனவேண்டுகோளின்படி தமிழ்நாட்டில் உள்ள எல்லா வங்கி ஊழியர்களும் இன்று 2 மணி நேரம் எதிர் நடவடிக்கையாக வேலை நிறுத்தம் செய்தனர்,

மதுரை நகரிலுள்ள சுமார 700 க்கும் மேற்பட்ட வங்கி ஊழியர்கள் 'பாங்க் ஆப் மதுரை" மத்திய அலுவலக முன்பு நிர்வாகத்தின் தொழிலாளர் விரோதக் கொள்கையை எதிர்தது மாபெரும் ஆர்ப்பட்டம நடத்தினர்.

இந்த ஆர்ப்பாட்டத்தை மதுரை, ராமநாதபுரம மாவட்டம் வங்கி ஊழியர் சங்கம் ஏற்பாடு செய்தது.

அமெரிக்க குண்டு வீச்சையும் மீறி

## கம்போடியாவில் விடுதலைப் படைகள் வெற்றிமுகம்

நாம்பென், ஏப். 20—

கம்போடியாவின் தலைநகரான நாம்பென்னில் தேசிய விடுதலைப்படைகளுக்கும் பொம்மை அரசுப்படைகளுக்குமிடையே யுத்தம் தீவிரமாக நடந்துவருகிறது. விடுதலைப்படைகள் மேலும் மேலும் முன்னேறுகின்றன.

நாம்பென்நகரின் கிழக்கு, மேற்குப்பகுதியில் சண்டை உக்கிரமாக நடக்கிறது

பொம்மை அரசுப்படைகளுக்கு ஆதரவாக அமெரிக்க விமானங்கள் கடுமையான குண்டு வீச்சுத்தாக்குதலில் முனைந்துள்ளது. பி. 52 ரக விமானங்களையும், வெடிகுண்டு வீசும் பிற விமானங்களையும் கொண்டு தீவிரமான குண்டு வீச்சில் ஈடுபட்டுள்ளது. இருந்த போதிலும் தேசிய விடுதலைப் படைகளின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தமுடியவில்லை.

# தீக்கதிர்

## இந்திரா ஆட்சியில் குடிஉரிமைக்கு வேட்டு

உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டத்தின் முக்கியமான ஷரத்து செல்லாது என டெல்லி சுப்ரீம் கோர்ட் நீதி மன்றம் தீர்ப்புக் கூறியுள்ளது. இச்சட்டத்தின் 17 (ஏ) என்ற ஷரத்தை அரசியல் சட்டத்துக்கு மாறானது என்று கூறி இதன் படி கைது செய்யப்பட்ட மனுதாரர்களை விடுதலை செய்யும்படியும் உத்தரவிட்டுள்ளது.

இந்தத் தீர்ப்பின்படி மேற்குவங்கத்தில் 2600 அரசியல் கைதிகளை நேர்மையாக விடுதலை செய்தாக வேண்டும். ஆனால் அரசியல் நேர்மைக்கும் இந்திராகாந்தி-சித்தார்த்த சங்கர் ரே ஆட்சிக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையே! இதற்குப்பின் அவர்கள் செய்வதென்ன?

மேற்கூறிய கைதிகளில் 1760 பேரை மட்டுமே விடுதலை செய்யப் போவதாகவும், ஆனால் இவர்களின் எதிர்காலப் பற்றி உண்மையில் சங்கங்களுடைய பலாத்கார அரசியலை கைவிட்டார்கள் என்பதை பரிசீலனை செய்த பின்னரே இந்த முடிவை மேற்கொள்ளப்போவதாகவும் சித்தார்த்த சங்கர் ரே அறிவிக்கிறார்.

முன்னாள் முதலமைச்சர் அஜய்முகர்ஜி கைதிகளை நேரில் சந்தித்தபின் அவர்களின் பலாத்காரச் சிந்தனைப் போக்கினை பரிசீலனை செய்து முடிவு செய்யும்படி நியமிக்கப்பட்டுள்ளார். அதனைப் பொறுத்து அடுத்த சில நாட்களில், தேவையானால் வேறு ஒரு அவசரச் சட்டத்தைக் கொண்டுவந்தேனும் சுப்ரீம் நீதிமன்றத் தீர்ப்பினுல் விடுதலை செய்யப்பட இருக்கும் பலரை மீண்டும் கைது செய்து சிறையிலேயே பூட்டி வைக்கப்போவதாகவும் மேற்கு வங்க அரசாங்கம் அறிவிக்கிறது.

சுப்ரீம் நீதிமன்றத் தீர்ப்புக்கு இந்திராகாந்தியும் சித்தார்த்தசங்கர்ரேயும் எந்த அளவுக்கு மதிப்புத் தருகிருர்கள் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

இந்தப் பிரச்சினை இந்த நாட்டுக் குடிமக்களின் பிரஜா உரிமை சம்பந்தப்பட்ட அடிப்படையான பிரச்சினையாகும். நம் நாட்டின் ஜனநாயக வாழ்வு சம்பந்தப்பட்ட பிரச்சினையாகும்.

இந்தியநாட்டு குடிமகன் ஒருவன்செய்த குற்றத்தை நீதிமன்றத்தின் முன் விசாரணைசெய்து நிரூபிப்பதுபற்றிய பிரச்சினையாகும்.

ஒருவன் குற்றவாளியா, இல்லையா என்பதை எந்த நீதிமன்றத்தின் முன்னும் நிரூபிக்க வேண்டியதில்லை. குறைந்தபட்சம் நீதிபதிகளை உறுப்பினர்களாகக்கொண்ட ஒரு ஆலோசனைக்குழுவிடம் கலந்து ஆலோசிக்காமல் சிறையில் அடைத்து வைத்திருக்கலாம்.

இதுதான் இந்திராகாந்தியின் மேற்பார்வையில் சித்தார்த்த சங்கர் ரே மேற்கு வங்கத்தில் அமுல் நடத்தி வரும் சட்டம்.

இப்படிப்பட்டதொரு சட்டம் அரசியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ள உரிமைகளுக்கே நேர் விரோதமானவை என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்துவிட்ட பின்னர், அரசியல் நேர்மையோ, கண்ணியமோ, ஜனநாயக உணர்வோ, நீதி— நியாய உணர்ச்சியோ இந்திரா காந்திக்கும் சித்தார்த்த சங்கர ரேக்கும் இருககுமானுல் இந்தத் தீர்ப்பை நேர்மையாக ஏற்றிருப்பார்கள். ஆனுல், ஏற்கவில்லை. மாருக புதிய அவசரச் சட்டம் ஒன்று கொண்டு வந்து இந்தத் தீர்ப்பையே முடமாக்கப் போவதாக அறிவிக்கிருர்கள்.

போலீஸ் அடக்குமுறையும் ஒடுக்குமுறையும் காங்கிரஸ் குண்டர்களின் வெறிச்செயல்களும் எதிர்க்கட்சிகளை அழிக்க இந்திரா காங்கிரசால் உபயோகப்படுத்தி வரும் கருவிகள். இவை மேலும் பயன்படுத் மேற்கு வங்கத்தில் ஜனநாயக உரிமை என்பதே குழிதோண்டிப் புதைக்கப்பட்டிருக்கிறது.

ஒருவன் பலாத்காரத்தில் நம்பிக்கையுடையவஞ இருந்தால் அவனைக் கண்டித்து விடமுடியுமா? இந்தியாவில் உள்ள சிரிமினல் சட்டங்களின்படியே எந்த ஒரு மனிதனும் பலாத்காரத்தில் நம்பிக்கையுடையவனென்ற காரணத்திற்காக தண்டிக்கப்படமுடியாது. ஒருவனுடைய நம்பிக்கைகளுக்காக அவனை யாரும் தண்டிக்க முடியாது. இந்த கொடுமை பாசிஸ்ட் சர்வாதிகார ஆட்சிகளில்தான் நடைபெறும். அனைத்து பலாத்கார நம்பிக்கைகளின் அடிப்படையில் செயல்பட்டபிறகுதான், அரசுக்கும் தீமை விளைவித்திருந்தால் இல்லையா என்பதை ஆதாரமாகக் கொண்டே அவனை தண்டனைக்கு உள்ளாக முடியும். ஜனநாயகத்தில் நம்பிக்கை உள்ள நாடுகளின் நடைமுறை இது.

ஆனால் இந்திரா காங்கிரசின் பரிபாலனத்தில் ஒரு குடிமகன் பலாத்காரத்தில் நம்பிக்கை உடையவனா என்று சுருதியை சோதிப்பது அவ்வாறு கருதும் நபர் யார்? இந்திராகாந்தி அல்லது சித்தார்த்தசங்கர்ரே போன்ற காங்கிரஸ்காரர்கள்! இவர்களது மனதில் எதிர்க்கட்சியினர் பலாத்காரவாதிகள் என்று பட்டால் போதும், சிறைக்கு அனுப்பி விடலாம்.

பலாத்காரத்தை கைவிட்டு விட்டார்களா இல்லையா என்பதை அஜய்முகர்ஜியைவிட்டு ஆராய்ச்சி.

அவருடைய சாந்தியைஅளவுகோலைவைத்து—கைதிகளுடன்பேசி அவர் தீர்ப்பு கூறப்போகிருராம். நாட்டில மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றம், நாடாளுமன்றம் இவைகளால்இயற்றப்பட்ட சட்டப்படிதான் ஆட்சி நடத்தப்படுகிறது என்று கூறிக்கொள்ள இந்திரா காந்திக்கோ சித்தார்த்தசங்கர்ரேக்கோ என்ன யோக்கியதை இருக்கிறது என்று வியக்கிருேம்.

திண்டுக்கல் தொகுதியில் போட்டியிடவரும் இந்திரா காங்கிரசாரே! உங்களுடைய நீதிமுறையையே மதிக்காத நீங்கள்— குடி மக்களின் குடியுரிமைக்கு மதிப்புத் தராத நீங்கள் — கொடுங்கோலன் ஜாரைப்போல் ஒரு மாநிலத்தில் சர்வாதிகார ஆட்சி நடத்தும் நீங்கள் வாக்காளர்களிடம் வாக்கு கேட்க என்ன உரிமை இருக்கிறது?

இத்தகைய ஜனநாயக கொலைகாரர்களுடன அதி முகவை இணைத்து வைக்க வலது கம்யூனிஸ்ட் இடைத்தரகர்கள்செய்யும் முயற்சிக்கு அதி முக இரையாகலாமா?

## அரசியல் கருத்துவேறுபாடு இருப்பினும்
# ஒன்றுபட்டு போராட முன்வருக
## இதர சங்கங்களுக்கு தோழர் பி.டி. ரணதிவே அழைப்பு

கொச்சி, ஏப், 20—

தொழிலாளி வர்க்கத்தின் பொதுவான கோரிக்கைகளுக்காகவும், அடிப்படையான கோரிக்கைகளுக்காகவும்—எவ்வித அரசியல் கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் அதை விட்டு விட்டு — ஒன்றுபட்ட போராட்டத்திற்கு சி ஐ டி யூ தயாராக இருக்கிறது என்றும், இதர சங்கங்களும் ஒன்றுபட்ட போராட்டத்திற்கு முன்வர வேண்டும் என்றும் தோழர் பி டி ரணதிவே கூறினர்.

கொச்சியில் சென்ற 17-ம் தேதியன்று நடைபெற்ற செய்தியாளர்கள் கூட்டத்தில் தோழர் பி டி ரணதிவே பேசினர், அவர் மேலும் கூறிபதாவது.—

வர்க்க ஒத்துழைப்புப் பாதையைப் பின்பற்றிக் கொண்டு, இந்தியத் தொழிலாளி வர்க்கத்தை ஆளும் வர்க்கத்தின் காலடியில் போட்டுப் பணயம் வைக்க ஏ ஐ டி யூ சியின் தலைமையைத் தனிமைப்படுத்தி விட்டு, இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் மகத்தான ஸ்தாபனமாக சி ஐ டி யூ உருவாகி 3 ஆண்டுகளாகிவிட்டன.

சி ஐ டி யூவைத் தகர்ப்பதும், தனிமைப்படுத்துவதும் தான் ஏ ஐ டி யூ சி — ஐ என் டி யூ சி—எச் எம் எஸ் ஆகிய சங்கங்களின் லட்சியம், அதற்காகஉதவி செய்யும் நிலையைத்தான் இந்திய ஆளும்வர்க்கம் கொண்டுள்ளது. ஆளும் வர்க்கத்தினுடையவும் அதன் பொம்மை சங்கங்களுடையவும் எல்லாவித எதிர்ப்புகளையும் ஜீரணித்துக் கொண்டு-சி ஐ டி யூ சங்கம் வலுப்பெற்று வருகிறது. குறுகிய காலத்திற்குள் சி ஐ டி யூவின் உறுப்பினர்களின் எண்ணிக்கை பத்து லட்சமாக உயர்ந்துள்ளது.

### கொடுமையான அடக்குமுறைகள்

மேற்குவங்கத்தில் சி ஐ டி யூ-வின் மீதும் அதனுடைய ஊழியர்கள் மீதும் பரந்த அளவிலும் கொடூரமாகவும் ஆளும் வர்க்கத்தினர் அடக்குமுறையை கட்டவிழ்த்து விட்டுள்ளனர். மேற்கு வங்கத்தில் 200 சி. ஐ. டி. யூ சங்கங்களுடைய அலுவலகங்களை காங்கிரஸ்காரர்கள் ஆக்கிரமித்துக்கொண்டனர். இதனுல், இந்த மாநாட்டுக்கு வருவதற்கு அந்தச் சங்கங்களால் பிரதிநிதிகளை அனுப்பஇயலவில்லை

மேற்குவங்கத்தில் இத்தகைய அடக்குமுறைகள் ஏவிவிடப்பட்ட போதிலும், சி ஐ டி யூ வின் மகத்தான வளர்ச்சியைத் தடுத்து நிறுத்துவதற்கு ஆளும் வர்க்கத்தினரால் முடியவில்லை.

இந்தியத் தொழிலாளி வர்க்கத்தை வலுவான ஒரு ஜனநாயகசங்கமாக வளர்த்துக் கொண்டு வருவதுதான் சி ஐ டி யின் பணி, தொழிலாளி வர்க்கத்திற்கு போராட்ட ஐக்கியத்தை ஊட்டி வளர்க்க வேண்டுமென்பது தான் சி ஐ டி யூ போதிப்பது.

தொழிலாளர் வர்க்கத்தின் வரலாற்று ரீதியான கடமையை நிர்வகிப்பதிலிருந்து அவர்களை பின்னடையச் செய்யும் போக்கைத்தான் துரதிருஷ்டவசமாக இதர சகோதர சங்கங்கள் பின்பற்றி வருகின்றன.

நாட்டில் பெரும்முக்கியத்துவம் வாய்ந்த ஜீவாதாரமான பிரச்சினைகளிலிருந்து —தொழிலாளி வர்க்கத்தின் கவனம திசை திருப்பி விடப்படுகிறது என்றும தோழர் ரணதிவே கூறினர்.

மேலும் அவர் கூறியதாவது,—

தொழிலாளி வர்க்கத்தின் பொதுவான கோரிக்கைகளுக்காகவும் அடிப்படையான கோரிக்கைகளுக்காகவும் — எவ்வித அரசியல் கருத்துவேறுபாடுதள் இருந்தாலும், அதை மறந்துவிட்டு. ஒன்றுபட்ட போராட்டத்திற்கு சி ஐ டி யூ தயாராகஇருக்கிறது. அத்தகைய ஒன்றுபட்ட இயக்கங்களை சி ஐ டி யூ சங்கம் இதர சகோதரச் சங்கங்களுடன் சேர்ந்து நடத்தியதுண்டு மேலும்தொடர்ந்து அவ்வாறுநடத்தும என்றும் தோழர் பி.டி.ஆர். கூறினர்.

## பிரதமப் பொறியாளருக்கு கண்டனம்

நெல்லை, ஏப், 18—

இங்குள்ள துவாரகா லாட்ஜில், திரு ராமசாமி தலைமையில் பொதுப்பணித் துறை வேலை முனனிட்டுப் பணியாளர் கூட்டம் ஏப் 15-ல் நடைபெற்றது. அது சமயம் 73-74க்கான செலவுகள் நிர்ணயம் செய்யப்பட்டன. நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திருவாளர்கள், பாக்கியம், இராமானுஜம் வைரவன், ராமசாமி, அப்துல் ரஹீம் ஆகியோர் மாநில தலைவர்களாக தேர்வு பெற்றனர். திருவாளர்கள் டேவிட், பாலன், சண்ணன், சுப்பிரமணியன் பி. வேலு, சாத்தூர் கோபால கிருஷ்ணன், தஞ்சை இரத்தினவேலு ஆகியோர் செயற்குழு உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டனர். கீழ்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றபபட்டன.

திண்டுக்கல் தேர்தலில், அங்குள்ள உறுப்பினர்கள். தொழிற்சங்க அமைப்புக்கு உதவி செய்யும் எந்த கட்சியினருக்கும் உதவி செய்யலாம்.

### வேலை கொடுக்கவும்

தமிழ்நாடு பொதுப்பணித் துறை பிரதமப் பொறியாளர் திரு நமச்சிவாயம் ஆற்றுப் பாதுகாப்புக் கோட்ட அதிகாரி திரு. ஏ. என். ராஜு இருவரும் 7 ஆண்டு தொடர் பணி செய்த நடமாடும் பணிகளை அலுவலர்களை ஆட்குறைப்பு செய்ததை கண்டித்தது. அவர்களுக்கு உடனடியாக தொடர் வேலை கொடுக்க அரசை கேட்டுக் கொண்டது.

வேலை நிதி அலுவலர்களை 'பென்சன் கிரேடு' அலுவலர்களாக மாற்ற வேண்டும்.

தொழிற்சங்க அங்கீகாரத்துடன் அரசு இச்சங்கத்தை அனுமதிக்க வேண்டும்.

சுயேச்சையான இச்சங்க நிர்வாகிகளுக்கு, தொழிற்சங்க வாதிகளுக்கு உண்டான சிறப்புரிமை வேண்டும்.

அரசு அதிகாரிகள் உடனுக்குடன் இச்சங்க மனுக்களை கவனிக்க வேண்டும்.

சமீபத்தில் வெளியிடப்பட்ட வேலை நிதி அலுலலர்களுக்கான சம்பள பட்டியலில் அநேக குறைபாடுகள் உள்ளன, அவைகளை திருத்தி அமைக்க, அதிகாரிகள், தொழிற் சங்க பிரதிநிதிகள், அரசியல் தலைவர்கள் கொண்ட ஒரு கூட்டத்தை கூட்டி விவாதித்து திருத்தி அமைக்க வேண்டும்.

### மாதச்சம்பளம் வழங்குக

வேலை நிதி அலுவலர்களான; அரசு அலுவலக வாகன ஓட்டிகளுககு ரூ. 230 அடிப்படை சம்பளமும், சீருடையும். விடுப்பு வசதிகளும், ஓவர் டைம படிகளும அளிக்க வேண்டும்.

தினக்கூலிகளை நீண்ட காலமாக வைத்திருக்கும் இவ்விலாகா, குறிப்பிட்ட கால அளவுக்குப் பின் மாத ஊதியம் அளிக்க வேண்டும்.

இவைகளை முன் வைத்து தமிழகம் தழுவிய போராட்டத்தை விரைவில் துவக்க இக்கூட்டம் முடிவு செய்தது. தொழிலன் நன்றி கூறினர்.




## தேனி பஸ் நிலையத்தில் தண்ணீர்த் தட்டுப்பாடு

ஐயா,

மதுரைமாவட்டம் தேனி-அல்லிநகரம் நகராட்சி பேருந்து நிலையத்தில் தண்ணீர் வசதி இல்லை. அங்கு ஒரு சிறிய குழாய் தான் உள்ளது. அதில காலை 8 மணிவரைக்கும் தான் தண்ணீர் வருகிறது; அந்தத் தண்ணீரையும் 'டீ' கடைக் காரர்களும், தண்ணீர் வண்டிக்காரர்களும் பிடித்துக்கொள்கிருர்கள். எனவே தண்ணீர்த் தட்டுப்பாடு மோசமாக உள்ளது இதைப் போக்க உரிய நடவடிக்கையை நகராட்சியினர் இதுவரை எடுக்காதிருக்கிருர்கள்.

ஆனுல், வரியோ, கொள்ளை வரி வாங்குகிருர்கள். அதுவும் குறிப்பிட்ட தினத்தில் கட்டச் சொல்லுகிருர்கள். அவ்வாறு கட்டாவிட்டால் "ஜப்தி" நடவடிக்கையில் இறங்குகிருர்கள்.

இவ்வாறு வசூலித்த வரியின் மூலம் ஆயிரக்கணக்கான ரூபாய்களை செலவிட்டு பேருந்து நிலையத் கட்டப்பட்டு தொரு எம். எல் ஏ. வைக் கூட்டி திறந்துவைக்கப் பட்டுள்ளதாகும் இந்த பஸ் ஸ்டாண்டில் தண்ணீர்த் தட்டுப்பாடு உள்ளதென்ருல் — அதுவும் தமிழகத்திலேயே 2-வது வணிகததலமான தேனி பேருந்து நிலையத்தில் தண்ணீர் இல்லை என்பது மிகவும் கேவலமானது ஆகும்.

ஆயிரக்கணக்கானவெளியூர்வாசிகளும், உள்ளுர் வாசிகளும் இந்தக் கோடை காலத்தில் தண்ணீர் இல்லாமல் கஷ்டப்படுகிருர்கள். எனவே நகராட்சி அதிகாரிகளும், பொறுப்பாளர்களும் உடனடி நடவடிக்கை மேற்கொண்டு இத்தண்ணீர் தட்டுப்பாட்டை நீக்கக் கோருகிறேன்.

இப்படிக்கு,
செல்வம்,
கான்வென்ட் தெரு
தேனி.

### இந்தோ-சீன விவகாரத்தில்
## நிக்சனின் அதிகாரம் குறைப்பு
### அமெரிக்க செனட்டில் மசோதா நிறைவேற்றம்

வாசிங்டன், ஏப் 19—

இந்தோ-சீன விவகாரத்தில், அமெரிக்கத் தலையீடு கட்டுப்படுத்தப்படும் என்று தெரிகிறது.

இந்தோ-சீன விவகாரங்களில், ஆயுதம் மற்றும் பொருளாதார உதவிகள் வழங்குவதற்கு அதிபர் நிக்சனுக்குள்ள அதிகாரத்தை கட்டுப்படுத்தும் மசோதா ஒன்று அமெரிக்க செனட் சபையில் பெரும்பாலான உறுப்பினர்களின் பலத்த ஆதரவுடன்நிறைவேறியது.

இந்தோ-சீன நாடுகளின் வியட்நாம், லாவோஸ், கம்போடியா போன்ற நாடுகளில் அமெரிக்க ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பாளர்கள் வாங்கிய உதையும் அமெரிக்க மக்களும், உலக மக்களும் அமெரிக்காவின் ஆக்கிரமிப்புச் செயலுக்கு கொடுத்த கண்டனக்களைகளும் அமெரிக்காவில் ஏற்பட்டு வரும் பொருளாதார நெருக்கடியும் இத்தகைய நிலையை எடுக்கும்படி அமெரிக்க செனட்டர்களை நிர்ப்பந்தித்திருக்கிறது.

### திண்டுக்கல் தேர்தல்
## தி மு க வேட்பாளர் தேர்வு

சென்னை. ஏம் 19—

திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதி உப தேர்தலில் தி மு க வேட்பாளராக வழக்கறிஞர் பொன் முத்துராமலிங்கம் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். இங்கு நடந்த தி மு க ஆட்சி மன்றக் குழுவில் இந்த முடிவு செய்யப்பட்டது.

இவர். வாடிபட்டி பஞ்சாயத்து யூனியன் தலைவராவார்.

## வலது கம்யூனிஸ்டுகளே, இந்திரா கூறுகிருர் கேளுங்கள்!

ஓ...... வலது கம்யூனிஸ்டுகளே சிந்தியுங்கள்!

"கம்யூனிஸ்டுகளுக்கோ, அல்லது கம்யூனிசத்திற்கோ புது காங்கிரஸ் ஊக்கமளித்ததில்லை! இனி ஊக்கமளிக்கப் போவதுமில்லை!

"காங்கிரஸ் கட்சியின் கொள்கையிலிருந்து விலகிச் சென்று கம்யூனிஸ்ட் கொள்கையை எவ்விடத்திலாவது மேற்கொண்டதாக எவரேனும் காட்ட முடியுமா"

—இவ்வாறு

"சோஷலிச மாதா" திருமதி இந்திரா அம்மையார் — புதுடெல்லியில் அஜ்மல்கான் பூங்காவில் பேசிய போது குறிப்பிட்டுள்ளார்.

17-4-73-தினமணி பக்கம் 4— பத்தி 4-7
17-4-73-அலைஓசை - பக்கம் 4— பத்தி 4

சிந்தியுங்கள்! வலது கம்யூனிஸ்டுகளே நன்ருகச் சிந்தியுங்கள்.

## இந்தியகம்யூனிஸ்ட்கட்சி(மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு
# கட்டிட நிதி

| | ரூ. பை |
|---|---|
| முன் வசூல் | 47977—29 |
| சென்னை செம்மிளகு | 10—00 |
| காஞ்சீபுரம் ஜீவா வாசகசாலை பொதுக்கூட்ட வசூல் | 7—50 |
| தண்ணிக்கிணத்துவலசு எஸ் கே ராசு | 5—00 |
| தென்னுற்காடு மாவட்டம் சிதம்பரம் தாலுகா உமாநாத் சுற்றுப் பிரயாண வசூல் | 500—00 |
| திருச்சி திருவெறும்பூர் பி ஆர் கூட்டத்தில் வசூல் | 101—00 |
| சென்னை செம்மிளகு | 10—00 |
| திருச்சி மாவட்டக் குழு மூலம் | 250—00 |
| அருப்புக்கோட்டை செல்வராஜ் | 1—00 |
| நெல்லை மாவட்ட பொதுத் தொழிலாளர் சங்கம் | 3—00 |
| சாரமடை சாஸ்திரி நகர் ஜனநாயக சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி சோழர் சாமிநாதன் குழந்தை காதணி விழாவை ஒட்டி | 5—00 |
| ஸ்ரீ வைகுண்டம் டி ஆர் எஸ் மூலம் புகாரி | 5—00 |
| திண்டுக்கல் ராஜமாணிக்கம்—ராஜலட்சுமி திருமணம் | 5—00 |
| அரூர் பிள்ளிப்பட்டி பி எம் கந்தசாமி மகள் தமிழரசி - பெருமாள் திருமணத்தை யொட்டி டாக்டர் துரைச்சாமி மூலம் | 10—00 |
| மதுக்கரை சுப்பணகவுண்டர் | 30—00 |
| மதுரை சொக்கலிங்கம - சந்திரா திருமணம் | 5—00 |
| பசுமலை பழனியப்பன் குழந்தைகளுக்கு ஜோதிபாசு, ராமமூர்த்தி என பெயர் சூட்டியதை யொட்டி | 2—00 |
| கரட்டூர் பி ராஜு | 2—00 |
| மாடசகுளம் வி கே பழனி மகன் சருப்பையா காராளம் திருமணத்தை யொட்டி | 10—00 |
| சரவனம்பட்டி எஸ் துரைசாமி-சரஸ்வதி திருமணத்தை யொட்டி | 5—00 |
| சென்னை 25வது வட்டம் கே பாலையா மகள் ராஜேஸ்வரி - பாலமுனுசாமி திருமணத்தை யொட்டி | 10—00 |
| மதுரை திடீர்நகர் சுந்தரராசு மகன் சண்முகம் காதணியை யொட்டி | 5—00 |
| திருமலைநாயக்கன் பாளையம் கே ராஜேந்தின் | 7—00 |
| சென்னை சீ வெங்கடேசன்-வெ பத்மாவதி மகன் ஜீவா சீனிவாசன் பிறந்த நாளை யொட்டி | 5—00 |
| ஸ்ரீவைகுண்டம் டி ஆர் எஸ் மூலம் முத்தையா | 3—00 |
| மதுரை கணேசபுரம் உ வெள்ளைச்சாமி - கனகம்பாள் திருமணத்தை யொட்டி | 5—00 |
| தஞ்சை ஜி க | 15000—00 |
| பொதுப்பணித்துறை தொழிலாளர்கள் ஒட்டன்சத்திரம | 5—00 |
| கோவை மாவட்டக்குழு | 4459—77 |
| மதுரை மாவட்டக் குழு | 750—00 |
| பழனி பி முருகன் குழந்தைகள் பிரேமாதேவி, பாலசுப்பிரமணி காதணி விழாவை யொட்டி | 5—00 |
| வளவன்மாதேவி தீக்கதிர் வாசகநண்பர்கள் ஆர் கே சுந்தரம் மூலம் | 7—00 |
| எரியோடு காளியப்பன் - ஜோதிமணி திருமணம் | 10—00 |
| ,, தவமணி - மீனு திருமணம் | 10—00 |
| ,, தண்டாயுதம்-புஷ்பம் திருமணம் | 10—00 |
| ,, திண்டுக்கல் பல்லிகா - சுந்தரம் திருமணம் | 25—00 |
| லட்சுமிபுரம் பொன்னுசாமி மகள் சரசுவதி-வேல்ராஜ் திருமணம் | 5—00 |
| சமயநல்லூர் ரத்தினம்-சிந்தாமணி திருமணம் | 4—00 |
| பழனி 17-வது வார்டு ரத்தினகிரி மகன் பழனிகுமார் காதணி விழாவை யொட்டி | 2—00 |
| நன்னிலம் தாலுகா செயலாளர் ம. சண்முகம - ராஜேஸ்வரி திருமணத்தை யொட்டி | 25—00 |
| குன்னியூர் சாமியப்டன் - நாகலட்சுமி திருமணத்தை யொட்டி | 5—00 |
| மதுரை மாவட்டக் குழு | 200—00 |
| குமரி மாவட்டக்குழு | 3000—00 |
| சேலம் மாவட்டக குழு | 700—00 |
| பொனமங்கலம் கருணாநிதி - செங்கையம்மாள் திருமணம் | 2—00 |
| சே மூப்பாண்டி மாரியப்பன் - ராசம்மாள் திருமணம் | 3—00 |
| குன்னியூர் ஜெகநாதன் - மாரியம்மாள் திருமணம் | 5—00 |
| ஏ கலையம்புத்தூர் கே கருப்பசாமி - கே நாகம்மாள் திருமணத்தை யொட்டி | 5—00 |
| | 73,216—56 |

### திருத்தம்

23—2—73-ம் தேதி தீக்கதிரில் வெளியான மதுரை நகர கட்டிட நிதிப் பட்டியலில் 2-வதுவார்டு அளித்த நிதி 269—00 விடுபட்டுள்ளதை சேர்த்துக் கொள்ளுக. தவறுக்கு வருந்துகிருேம்.

### தி. மு. க. எம் எல் ஏ பதவி இழந்தார்
## ஸ்தாபன காங்கிரஸ் வெற்றிபெற்றதாக அறிவிப்பு

மதுரை, ஏப் 19—

மதுரை மாவட்டம் மேலூர் வடக்குத் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட தி. மு. க. எம் எல். ஏ. பி. மலைச்சாமியின் தேர்தல் செல்லாது என சுப்ரீம் கோர்ட் நேற்று தீர்ப்பளித்தது.

அவரை எதிர்த்துபோட்டியிட்ட ஸ்தாபன காங்கிரஸ் வேட்பாளர் ஆண்டி அம்பலம் வெற்றிபெற்றதாக அறிவிக்கப்பட்டது.

127 ஓட்டு வித்தியாசத்தில் தி. மு. க. வெற்றியடைந்தது என 1971ம் ஆண்டு தேர்தலின்போது அறிவிக்கப்பட்டது. அதே சமயத்தில் செல்லாத வாக்குகள் 3381 எனவும் அறிவிக்கப்பட்டது.

ஓட்டுகள் அனைத்தையும் திரும்ப எண்ணும்படி நீதிமன்றம் உத்திரவிட்டு ஸ்தாபன காங்கிரஸ் வேட்பாளர் வெற்றிபெற்ருர் என அறிவித்துள்ளது.

# தி. மு. க. அரசின்
# குத்தகை விவசாயிகள் பாதுகாப்பு சட்டத்தின் (அவ)லட்சணம்

தமிழ்நாடு குத்தகை விவசாயிகள் (நிலஉடைமை யாளரின் உரிமைகளை வாங்கிக்கொள்வதற்கான) மசோதாவை தமிழ்நாடு சட்டசபை 1973, ஏப்ரல் 3-ம் தேதி நிறைவேற்றி. இந்தியக் குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்காக அனுப்பியிருக்கிறது.

இச்சட்டத்தை "புரட்சிகரமான நிலச்சீர்திருத்தச் சட்டம்" என்று தி மு க அரசாங்கம் வருணித்துள்ளது.

ஆனால் இச்சட்டத்தின் உண்மையான தன்மை என்ன என்பதை பரிசீலிப்போம்.

தமிழ் மாநிலம் முழுவதும் 3,86,520 சாகுபடி செய்யும் குத்தகை விவசாயிகள் இருப்பதாகவும். இவர்கள் சாகுபடி செய்யும் நிலத்தின் அளவு 5,89 055 ஏக்கர்கள் என்றும் ரெவின்யூ அமைச்சர் திரு சண்முகம் 1973, ஏப்ரல் 2-ம் தேதியன்று தமிழ்நாடு சட்டசபையில் தெரிவித்தார்.

'இந்தச் சட்டம் புரட்சிகரமான' சட்டம் என்று தி. மு. க. அரசு பறை சாற்றிய ஏதோ தமிழகம் முழுவதிலுமுள்ள உண்மையான எல்லா குத்தகை விவசாயிகளுக்கும் இதனுல் நன்மை ஏற்பட்டுவிடும் என்ற பிரமை தோன்றக்கூடியவகையில் தி மு க அரசு பெருமை பாராட்டி விரும்புகிறது.

ஆனுல் யதார்த்த உண்மை என்ன? தமிழகத்தில் சாகுபடியில் உள்ள நிலத்தின் மொத்த அளவு சுமார் 1 கோடியே 50 லட்சம் ஏக்கர்களாகும். இதில் 5,89,055 ஏக்கர்கள் தான் குத்தகை விவசாயிகளின் கையில் உள்ளதாம். பாக்கியுள்ள சுமார் 1 கோடியே 44 லட்சம் ஏக்கர்கள் "சொந்தச்சாகுபடி" யில் அதாவது நிலச் சுவான்தார்களே நேரடியாக சாகுபடி செய்து வருகிருர்களாம்!

## அன்றே சொன்னேம்

எனவே, அமைச்சர் கூறும் புள்ளி விபரத்தின்படி, சாகுபடியில் உள்ள நிலத்தில் 4 சதவிகிதத்திற்கும் குறைவானநிலமே குத்தகை விவசாயிகளின் கையில் உள்ளது. பாக்கி 96 சதவிகித நிலம் நிலச்சுவான்களின் சொந்தச் சாகுபடியாம்.

இது என்ன மோசடி? தமிழக அரசின் குத்தகை தாரர் பதிவுச்சட்டம் வந்தபொழுதே, நாம் கூறினேம். உரிமைகளை அளிக்காமல், வெறும் பதிவு மட்டும் செய்யச் சொல்வது குத்தகை விவசாயிகளுக்கு பதிவு செய்து கொள்ள ஊக்கம் அளிக்காது எனறேம். அரசு கேட்கவில்லை.

குத்தகை பதிவுச் சட்டம் பயன்படவேண்டுமானுல், ஆங்காங்கே கிராமங்களுக்கு அதிகாரிகள் நேரடியாகச் சென்று, விவசாயிகளை கூட்டி வைத்துக்கொண்டு, ஸ்தல விசாரணை செய்தால்தான், உண்மையான குத்தகை விவசாயிகளை எல்லாம் பதிவு செய்ய முடியும் என்று கூறினேம், இதையும் அரசு ஏற்றுக்கொள்ளவில்லை.

## கண் துடைப்பே

இந்த நிலைமையில், நிலச்சுவான்கள் குத்தகை பதிவு நடக்கும்பொழுது, குத்தகை சாகுபடியாளர்களின் பெயர் களைப் பதிவுசெய்ய விடாமல் பல வழிகளிலும் தடுத்து விட்டனர். அதிகாரிகள் மூலம், தம் நிலங்கள் எல்லாம் 'சொந்தச் சாகுபடி' என பதிவு செய்தனர்.

எனவே தமிழகத்தில் உண்மையில் சாகுபடி செய்யும் குத்தகை விவசாயிகளில் மிகப் பெரும்பகுதியினருக்கு இச்சட்டத்தினுல் எவ்வித பயனும் இல்லை. அவர்கள் ஏமாற்றப்பட்டு விட்டார்கள். அவர்களில் ஒரு மிகச் சிறிய பகுதியினருக்கு மட்டுமே இச்சட்டம் பொருந்தும். பல லட்சக்கணக்கான உண்மையான குத்தகை சாகுபடி யாளர்கள் வஞ்சிக்கப்பட்டுள்ளார்கள்.

எனவே, உண்மையான குத்தகை சாகுபடியாளர்கள் அனைவரையும் பதிவு செய்வதற்கு உடனே அரசு நடவடிக்கை எடுத்தால் ஒழிய, இந்தச் சட்டம் ஒரு கண் துடைப்பே ஆகும்.

## மீட்பு உரிமை யாருக்கு?

வருமான வரி, விவசாய வருமான வரி செலுத்தாத நபர்கள், இப்பொழுது குத்தகை சாகுபடிக்காரர் வசம் இருக்கும் நிலத்தில் பாதி அளவு வரை, சொந்தச் சாகுபடிக்கு மீட்டுக்கொள்ள இச்சட்டம் வகை செய்திருக்கிறது. தாங்களோ அல்லது தங்களின் குடும்ப உறுப்பினர்களோ சொந்த உடல் உழைப்பின் மூலம் சொந்தச் சாகுபடியில் ஈடுபடாதவர்கள், இந்த மீட்பு உரிமை இத்தகையோருக்கு அளிப்பது நியாயமானதாகும். தாங்கள் உழைக்காமல், தம் மேற்பார்வையில் பண்ணை சாகுபடி செய்ய விரும்புவோருக்கு, இந்த மீட்பு உரிமை அளிக்கப்படுவது நியாயமல்ல.

கோவில்களுக்கும், அறநிலையக் கட்டளைகளுக்கும், 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் சொந்தச் சாகுபடிக்கு வைத்துக் கொள்ள சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ளது. இந்த நிறுவனங்கள் சொந்தச் சாகுபடிக்கு ஏற்கனவே, 20 ஸ்டாண்டர்டு ஏக்கர் வைத்துக்கொள்ள 'பப்ளிக் டிரஸ்ட்' சட்டம் அனுமதித்துள்ளது. அந்த 20 ஸ்டாண்டர்ட் ஏக்கர் ஏக்கருடன் இப்புதிய சட்டம் 10 ஸ்டாண்டர்ட் ஏக்கர் நிலத்தை கூடுதலாக இந்நிறுவனங்களுக்கு சொந்தச் சாகுபடிக்கு வைத்துக்கொள்ள அனுமதித்துள்ளதென ரெவின்யூ அமைச்சர் திரு சண்முகம் ஏப்ரல் 3-ல், தமிழ்நாடு சட்டசபையில் உறுதி கூறியுள்ளார்" — இந்த மசோதாமூலம் கோவில் களுக்குப் பாதகம் ஏற்படக்கூடாது என்பதற்காக வேதானவே 20 ஸ்டாண்டர்டு ஏக்கர் சொந்தச் சாகுபடிக்கு வைத்துக்கொண்டிருந்த போக மேலும் 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் சொந்த சாகுபடிக்கு வைத்துக் கொள்ள வகை செய்யப்பட்டுள்ளது என்று அமைச்சர் விளக்கினுர்.

("தினமணி" மதுரை பதிப்பு 5—4—73-ம் தேதி 4-ம் பக்கம்— 6ம் பத்தி)

கேரளத்தில், தோழர் நம்பூதிரிபாட் அரசாங்கம் ஆட்சியிலிருந்த பொழுது குத்தகை சாகுபடியாளர் பாது காப்புச்சட்டம் கொண்டுவந்து நிறைவேற்றியது அதில் கோவில்கள், அறக்கட்டளைகளுக்கு சொந்தச் சாகுபடிக் கென்று எவ்வித விதிவிலக்கும் கொடுக்கப்படவில்லை. அங்கிலங்களை சாகுபடி செய்துவந்த அனைத்து குத்தகை விவசாயிகளும் நிலத்தை தம் உடைமையாக்கிக் கொள்வதற்கு கேரளததில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின் தலைமையில் இயங்கிய அரசாங்கம் வழிவகை செய்து விட்டது. "புரட்சிகரமான" சட்டம் என பறைசாற்றும் தி மு க அரசாங்கம், ஏற்கனவே சொந்தச் சாகுபடியில் இந்நிறுவனங்கள் வைத்திருக்கும் 20 ஸ்டாண்டர்டுஏக்கர் களுக்கு, மேலும் 10 ஸ்டாண்டர்டு ஏக்கர்களை கூட்டியுள்ளது!

## என். சங்கரய்யா

## கேரளத்தில் செய்த தென்ன?

கேரளச் சட்டத்தில், நிலச்சுவான் — குத்தகை சாகுபடியாளர் என்ற உறவு முறிக்கப்பட்டது. நிலம் சாகுபடி செய்யும் குத்தகை விவசாயிக்கு சொந்தமாக்கப் பட்டது, நிலஉடைமையாளருக்கு ஈடு கொடுக்கும் பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. விவசாயி களிடம் அரசாங்கம் தவணைகளில் வசூலித்துக்கொள்ள வகைசெய்யப்பட்டது. இதனுல், விவசாயிக்கு நிலையான உரிமையும் நிலஉடைமையும் கிடைத்தது.

தி மு க வின் சட்டம் 12 தவணைகளில், குத்தகை விவசாயி நேரடியாக நில உடைமையாளருக்கு பணம் கட்டும்படி கூறுகிறது. முதல் தவணை கட்டி அடுத்த தவணை கட்டத்தவறினுல். தவணைப் பணத்தைப்பெற கடுமையான நடவடிக்கைகளுக்கு சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ளது. நிலத்தின் விலை ஒப்பந்தம் மூலமோ அல்லது நியாய வாரத்தின் 12 மடங்கு என்ற முறையிலோ நிர்ணயிக்கப்படும் என திமுக சட்டம் கூறுகிறது,

தமிழகத்தில், நியாய வாரம் என்பது அநியாய வாரமாகத்தான இருந்து வருகிறது. அதாவது நஞ்சையில், விளைச்சலில் குறைந்தது 40 சதவிகிதத்தை நில உடைமையாளருக்கு விவசாயி கொடுக்கவேண்டும். புஞ்சையில் 33⅓ சதவிகிதம் அதாவது மூன்றில் ஒருபங்கு நிலஉடைமை யாளருக்கு கொடுக்கவேண்டும் விளைச்சலில் ¼ பங்கு, அதாவது 25 சதவிகிதத்திற்கு அதிகமாக வாரம் இருக்கக் கூடாது என்று விவசாயிகள் இயக்கம் போராடி வருவது அனைவருக்கும் தெரியும். திட்டக்கமிஷன்கூட விளைச்சலில் கால் பங்கிற்குமேல், வாரம் இருக்கக்கூடாது என்று சிபாரிசு செய்திருக்கிறது.

அதுமட்டுமல்ல, இந்த 12 மடங்கு நியாய வாரத் தொகையுடன், நிலத்தில் பம்புசெட், கிணறு, கட்டிடம் ஆகியவற்றின் விலையில் பாதியையும் குத்தகை விவசாயி கொடுக்க வேண்டுமென்று தி மு க சட்டம் கூறுகிறது.

இவ்வளவு பெரும் தொகையைக்கொடுத்து நிலத்தை உடைமையாக்கிக் கொள்ள வசதி படைத்த குத்தகை விவசாயிகள் மிகக் மிகக் குறைவானவாகளே இருப்பார்கள் என்பது தெளிவு.

எனவே இத்தகைய அடிப்படை குறைபாடுகளைக் கொண்டிருக்கும் தி மு க அரசின் இச்சட்டத்தின் உண்மையான தன்மையைப் புரிந்துகொண்டு, இந்த அடிப்படைக்குறைபாடுகளைப் போக்க தொடர்ந்த கிளர்ச்சியில் தமிழக குத்தகை விவசாயிகள் ஈடுபடவேண்டும்.

# பழிவாங்குதலைக் கண்டித்து
## மின் ஊழியர் ஊர்வலம்

திருச்செந்தூர், ஏப், 18—

திருச்செந்தூரில் மின் சாரத் தொழிலாளர்கள், மின் வாரிய அதிகாரிகளின் பழி வாங்கும் போக்கைக் கண்டித்து ஏப். 10-ல் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர். சாததான்குளம் ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர் பகுதிகளைச் சேர்ந்த சுமார் 400 பேர் பஸ் ஸ்டாண்டிலிருந்து, ஊர்வலமாகப் புறப்பட்டு முக்கிய வீதிகள் வழியே முழக்கங்களை எழுப்பிக் கொண்டு பயணியர் விடுதி முன் வந்து சேர்ந்தனர். அங்கு முகாம் செய்திருந்த நாகர்கோவில் லேபர் ஆபீசரிடம் மனு ஒன்று அளித்தார்கள. அதில், மின் வாரிய அதிகாரிகளின் பழி வாங்கும் நடவடிக்கையைக் கண்டித்தும், ஊர் மாற்றல் உத்திரவுகளை ரத்துச் செய்யக் கோரி வலியுறுத்தப்பட்டும் இருந்தது.

தொழிலாளர்களின் கோரிக்கைகள் குறித்து உரிய நடவடிக்கைகள் மேற்கொள்வதாக உறுதியளித்தார்.

பின்னர் நடந்த கூட்டத்தில் தோழர்கள் நடராசன், கணபதி ராமன், சிவஞானம், சங்கரராசபாண்டியன் ஆகியோர் பேசினர்.

# உலகநாடுகளின் கழுத்திலிடும் சுருக்குக்கயிறே
# அமெரிக்க ராணுவ உதவி
## விபரங்கள் கூறிடும் விபரீதங்கள் காணீர்

புதுடெல்லி. ஏப். 20—

அமெரிக்க அயல்நாட்டு ராணுவ "உதவி"த் திட்டம் இரண்டாம் உலகப் போர் முடிந்தவுடனேயே செயல்பட்த் தொடங்கிவிட்டது, அன்றுதொட்டு இந்த "உதவி" 80 நாடுகட்குவழங்கப்பட்டுள்ளது 1946-லிருந்து 1972 முடிய இந்த "உதவி"க்கென நேர்முகமாக ஒதுக்கப்பட்ட மொத்தத் தொகைமட்டும் 4 320 கோடி டாலராகும் (சுமார் 33 ஆயிரம் கோடி ரூபாய் - (1 டாலர் என்பது சுமார் 7½ ரூபாய் இருக்சலாம்)

என்றுலும் இந்தத் தொகையைக் கொண்டு மட்டும் அமெரிக்க ராணுவ "உதவி"யின் முழு அளவையும் கணித்துவிட முடியாது. உண்மையிலேயே இதற்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டது என்ற உண்மையை அதிகாரப் பூர்வமான அமெரிக்கப் புள்ளி விவரங்கள் உலகமக்களிடமிருந்து மட்டுமல்லாமல் அமெரிக்க மக்களிடமிருந்தும் மறைத்து வைக்கப்பட்டுள்ளன.

"உதவித்" திட்டத்தை வெவ்வேறு பகுதிகளாகப் பிரித்து வைத்திருப்பதன்மூலம் இவ்வாறு மறைப்பதும் சாத்தியமாகிவிடுகிறது பொருளாதார "உதவி" "அவசரகால "உதவி, மற்றும் பிற நிதிகளிலிருந்து செலவிடப்படும் தொகைகளிலும் பெரும் பகுதி ராணுவக் காரியங்களுக்கே செலவிடப்படுகிறது.

ஏதாவதொரு நாட்டுக்கு அல்லது நாடுகளுக்கு அவற்றின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுவது என்ற பெயரால், அமெரிக்கா-தனது கூட்டாளிகளான நாடுகள் விமான நிலையங்களையும், பெரு வழி மார்க்கங்களையும், துறைமுகங்களையும், வானெலி நிலையங்களையும் கட்டிக் கொள்ள—அதாவது முதன்மையாக ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த வசதிகளை ஏற்படுத்திக் கொள்ள உதவுகிறது.

## இந்தோ—சீனுவில்

அமெரிக்க ராணுவ "உதவி"யின் பெரும் பகுதி அமெரிக்க நாட்டின் பாதுகாப்பு இலாகா பட்ஜெட்டிலிருந்தே ஒதுக்கப்படுகிறது. உதாரணமாக, இந்தத் தொகைகளில் தென் வியட்நாமில் 'தியூ'வின் பொம்மை ஆட்சியைப் பாதுகாப்பதற்கும், லாவே சிற்கும் தாய்லாந்திறகும் வழங்கும் "உதவி"க்கும் ஒதுக்கப்பட்டுள்ள நிதிகளும் அடங்கும்.

1972-ல் அமெரிக்க ராணுவத் தலைமையகமான பென்டகன் இநதக் காரியங்களுககாக 220 கோடி டாலர்களை ஒதுக்கியது; அதே சமயம் ராணுவ "உதவி"த்திட்டத்தின் பேரால் இதனையொத்த நிது ஒதுக்கீடுகள் 140 கோடி டாலரை எட்டியது.

மேலும், அமெரிக்கப்பாதுகாப்பு இலாகா ஆண்டு தோறும் "உபரியாக மிஞ்சிய" பொருள்களையும் பிற நாடுகளுக்கு அனுப்பி வருகிறது. இந்தப்பொருட்கள் முதலில் திட்டமிடப்பட்ட "உதவி"த தொகைகளின் மதிப்பைக்காட்டிலும் பொதுவாக மிகவும் அதிகமாகவே உள்ளன. உதாரணமாக 1970ல். "உபரியாக மிஞ்சிய" 8 கோடி டாலர் மதிப்புள்ள பொருள்களை வழங்குவது என்று திட்டமிடப்பட்டது. ஆனுல் உண்மையில் 52 . 34 கோடி டாலர் மதிப்புக்கு பொருள் வழங்கப்பட்டன. இந்த "உபரியாக மிஞ்சிய" பொருள்களில் நவநவினமான கருவிகளும் இடம் பெறுகின்றன என்பதையும் சுட்டிக் காட்ட வேண்டும்.

## நோக்கம்தான் என்ன?

இந்த ராணுவ "உதவி"யின் நோக்கம் என்ன? பொதுவாக, உலக முதலாளித்துவ அமைப்பை, குறிப்பாக அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் ஸ்தாபனங்களை வலுப்படுத்திக் கொள்வதே இதன் பிரதான நோக்கம். அதே சமயம் இந்த "உதவி" சோஷலிச நாடுகளுக்கும் உலகத் தொழிலாளி வர்க்கத்துக்கும், தேச விடுதலை இயக்கத்துக்கும் எதிரானது ஆகும், 1946—1970 ஆண்டுகளில் ஒதுக்கப்பட்ட ராணுவ "உதவி"த் தொகைகள் அனைத்திலும் சுமார் 40 சதவிகிதத் தொகைகள், சோஷலிச நாடுகளை ஒட்டியுள்ள நாடுகளுக்கே வழங்கப்பட்டன என்ற உண்மையிலிருந்தே இதனைப் புரிந்துகொள்ளலாம்.

அமெரிக்க நிதி உதவியில் பெரும் பகுதி (48 5 சதவிகிதம்) மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கே சென்றது. மேற்கு ஐரோப்பாவில் இப்போது அமெரிக்க ராணுவ "உதவி"யைப் பெருமளவுக்குப் பெற்றுவரும் நாடுகள் கிரீசும். ஸ்பெயினும் ஆகும். 1946-லிருந்து 1970 வரையில் கிரீஸ் 200 கோடி டாலருக்குமேல் "உதவி" பெற்றது.

அமெரிக்கா கிரீஸுக்கு இவ்வளவு தாராளமாக நிதி "உதவி" செய்ததற்கு, நேட்டோ ராணுவக் கூட்டணியின் தெற்குப்புற அணியைப் பலப்படுத்தவும், கிரீஸை ஓர் அமெரிக்க ராணுவத் தளமாக மாற்றவும் விரும்பியதுதான் காரணம் ஆகும.

மேலும். அமெரிக்க ஆயுதங்களை வாங்குவது சம்பந்தமாக கிரீசுக்கு அண்மையில் 20 ஆண்டுத்தவணையில் கடன் வழங்கப்பட்டு உள்ளது என்பதையும், கிரீஸ் ஏற்கெனவே 36 'பாண்டம்' விமானங்களை வாங்கிவிட்டது என்பதையும் இங்கு குறிப்பிட்டாக வேண்டும்.

## கைப்பாவை அரசுக்கு முட்டுக்கொடுக்க

ஆசியாவுக்கு ராணுவ "உதவிக்காக" அமெரிக்கா வழங்கி வரும் தொகை 1950 ஆண்டுகளில் தொடக்சம் தொட்டு அதிகரிக்கத் தொடங்கியது. 1970-ல் இந்தத் தொகை மொத்தத்தொகையில் கிட்டத்தட்ட 60 சதவீகிதத்தை எட்டியது, இந்த உதவியைப் பெருளவுக்குப் பெற்று வருபவை தென்வியட்நாமிலுள்ள சைகோன் பொம்மைஅரசாங்கம் இஸ்ரேல்,தென்கொரியா, சியாங்-சே-ஷேக் குப்பல், தாய்லாந்து, மற்றும் சில நாடுகள் ஆகும்.

வியட்நாமிய மக்களுக்கு எதிராக அமெரிக்கா நடத்திய ஆக்கிரமிப்புப் போரிலும் இந்த ராணுவ "உதவி" பெரும்பங்கு வகித்தது. சைகோனில் உள்ள தமது கைப்பாவைகளுக்கு அமெரிக்கா நவீன தளவாடங்களை வழங்கியது. விமானத் தளங்கள், துறைமுகங்கள், வானெலி நிலையங்கள் முதலியவற்றைக் கட்டிக் கொடுப்பதிலும் உதவியது. "வியட்நாமிய மயமாக்கும்" கொள்கையை நிறைவேற்றிவந்த அமெரிக்க ராணுவ ஆலோசகர்களுக்கும் சைகோன் அதிகாரிகளுக்கும போர் வீரர்களுக்கும் ராணுவப் பயிற்சியும் அளித்தனர்.

அமெரிக்கா, வியட்நாம் போரில் தனது கூட்டாளிகளையும் சம்பந்தப்பட வைப்பதற்காக ராணுவ "உதவி"யையும் பிற தொடர்புகளையும் பயன்படுத்தியது. ஜப்பானும் சியாங்-கே-ஷேக் கும்பலும் அமெரிக்கத் துருப்புக்களுககு ராணுவ தளவாடங்களை சப்ளை செய்தன: வியட்நாம போரில் பழுதுபட்ட அமெரிக்க ஆயுதங்களையும் ரிப்பேர் செய்து கொடுத்தன.

அமெரிக்கா தென்வியட்நாமுக்கு அனுப்பி வந்த ஆயுத சப்ளை சென்ற ஆண்டில் அக்டோபர் மாத இறுதியிலும் நவம்பர் மாதத்திலும் மிகவும் அதிகரித்தது. யுத்தத்துக்கு முடிவுகட்டி, வியட்நாமில் அமைதியை நிலை நாட்டுவதற்கான உடன்படிக்கையில் ஒப்புக்கொண்ட தேதியில் கையெழுத்திட மறுத்த அமெரிக்கா, தியூ அரசாங்கத்துக்கு, தான் வழங்கும் ராணுவ "உதவி"த் திட்டத்தை அவசர அவசரமாக நிறைவேற்ற முனைந்தது.

நவம்பர் மாத மத்தியில், அமெரிக்க ராணுவத் தலைமையகமான பென்டகன், சைகோன் ஆட்சியாளர்களுக்கு சி–130 ரகத்தைச் சேர்ந்த 30 போக்குவரத்து விமானங்களையும், ஏ–37 ரகத்தைச்சேர்ந்த 90 போர் விமானங்களையும், 120 எஃப்-5 ரகத்தைச்சேர்ந்த 120 குண்டு வீச்சு போர் விமானங்களையும், ஏ-1 ரகத்தைச்சேர்ந்த பல விமானங்களையும், ஏராளமான ஹெலிகாப்டர்களையும், 70 டாங்கிகளையும், 100 கவச பீரங்கிகளையும், பல்வேறு வகைப்பட்ட சுமார் 70 போர்க்கள பீரங்கிகளையும் வழங்கியதாக "வாஷிங்டன் போஸ்ட்" என்ற அமெரிக்கப் பத்திரிகையே குறிப்பிட்டுள்ளது,

## 1946-1970 ஆண்டுகளில் கண்டம் வாரியாக வழங்கப்பட்ட அமெரிக்க ராணுவ உதவியின் அளவு

| கண்டம் | 1946—1952 கோடி டாலர் | 1946—1952 சத விகிதம் | 1953—1961 கோடி டாலர் | 1953—1961 சத விகிதம் | 1970 கோடி டாலர் | 1970 சத விகிதம் | 1946—1970 கோடி டாலர் | 1946—1970 சத விகிதம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஐரோப்பா கண்டம் ... | 218.03 | 65.6 | 1368.49 | 58.8 | 18 35 | 16 8 | 1946 09 | 48 5 |
| ஆசியா கண்டம் ... | 94-09 | 28-3 | 856.90 | 37.0 | 64 09 | 58 5 | 1717,18 | 42.8 |
| ஆப்பிரிக்கா கண்டம் ... | — | — | 5 3 | 0 2 | 2.95 | 2.7 | 32 12 | 0,7 |
| லத்தீன் அமெரிக்கா ... | 0.2 | — | 41.88 | 1.9 | 5.72 | 5.3 | 123.1 | 3.0 |
| மாகடலின் மத்தியில் உள்ள நாடுகள் ... | — | — | 3.21 | 0.1 | 1295 | 11.8 | 79.62 | 2 0 |
| ஏனைய தொகைகள் ... | 20 13 | 6.1 | 42 45 | 2 0 | 5,38 | 4.9 | 125;27 | 3,0 |
| மொத்தம் ... | 332 27 | 100,0 | 2318 23 | 100,0 | 109 44 | 100 0 | 4023.38 | 100 0 |

## இஸ்ரேலுக்கு

இஸ்ரேலுக்கும் அமெரிக்கா கணிசமான ராணுவ "உதவி"யை வழங்கி வருகிறது; ஏனெனில், அரபு நாடுகளிலுள்ள முற்போக்கான ஆட்சிகளுக்கு எதிரான போராட்டத்தில் இஸ்ரேல் ஒருபெரும் தளமாக உதவும் என்று பென்டகன் கருதுகிறது. ஏவுகணை—எதிர்ப்புக் கருவிகள், ராடார் எந்திரங்கள், மற்றும் வழிகாட்டும் ராணுவக் கருவிகள் ஆகியவற்றை உற்பத்தி செய்வதில் இஸ்ரேலுக்கு உதவுவது பற்றியும் அமெரிக்கா இஸ்ரேலுடன் ஓர் ஒப்பந்தம் செய்துள்ளது. இஸ்ரேலிய ராணுவத்திற்கு 'லான்ஸ்' ஏவுகணைகளையும, மேலும் பல 'பாண்டம' விமானங்களையும். 'ஸைஹாக்' விமானங்களையும் சப்ளை செய்யவும் அமெரிக்கா திட்டமிட்டுள்ளது.

## தேச விடுதலை இயக்கங்களுக்கு எதிராக

லத்தீன் அமெரிக்கரவில், பிற்போக்கான ராணுவ—சர்வாதிகார ஆட்சிகளுக்கு முட்டுக் கொடுக்கும் நோக்கத்தோடும், அங்கு நிகழ்ந்துவரும் தேச விடுதலை இயக்கங்களை ஒடுக்கும் நோக்கத்தோடும் அமெரிக்கா லத்தீன் அமெரிக்க நாடுகளுக்கும் ராணுவ "உதவி"யை வழங்கி வருகிறது.

பொதுவாக. இந்த ராணுவ "உதவி" தவணைக் கடன்கள், "மான்யங்கள்" என்ற வடிவிலேயே வழங்கப்படுகின்றது, இவற்றில் தவணைக் கடன்களின அளவு கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டே வந்து. 1970-ல் 52 · 5 சதவிகிதத்தை எட்டி விட்டது.

ராணுவ "உதவிக்காக" அமெரிக்கா ஒதுக்கியுள்ள நிதிகளில் பெரும் பகுதி. ராணுவ தளவாடங்கள், ஆயுதங்கள் வடிவிலேயே போய்ச் சேர்கின்றன, 1950 லிருந்து 1969 முடியவுள்ளகாலத்தில் அமெரிக்கா 400 கோடிடாலர்களைக் கொடுத்து உதவியது அதே சமயம் 1200 கோடி டாலர் பெருமானமுள்ள கருவிகளையும் விற்றது, இந்தக் கருவிகளில் 1022 குண்டு வீச்சு விமானங்களும். 9956 போர விமானங்களும் 10,360 பிற விமானங்களும். 1354 ஹெலிகாப்டர்களும், 50228 ஏவு கணைகளும், 21,429 டாங்கிகளும், 12 போர்க் கப்பல்களும் 144 நாசகாரிக் கப்பல்களும், 31 நீர் மூழ்கிக் கப்பல்களும், 3359 பிற கப்பல்களும் மற்றும் ஏராளமான துப்பாக்கிகளும், எந்திரத் துப்பாக்கிகளும், லாரிகள் முதலியனவும் இடம் பெற்றிருந்தன,

## போர்ப் பயிற்சி

இந்த ராணுவ "உதவி" யில் ஒரு பகுதி போர் வீரர்களுக்குப் பயிற்சியளிக்கவும் பயன்படுத்தப்படுகிறது. 1950—1970 ஆண்டுகளில் அமெரிக்காவில் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த 3 இலட்சத்து 18 ஆயிரம் பேர் வீரர்கள் ராணுவப் பயிற்சி பெற்றனர்.

இவ்வாருக, அமெரிக்கா தனது அயல் நாட்டு ராணுவ "உதவி"த் திட்டத்தை, வெகுஜன விரோதமான ராணுவ ஆட்சிகளை ஆதரித்து நிற்பதற்கும் வலுப்படுத்துவதற்குமே பயன்படுத்தி வருகிறது. அதே போல் உலக ஆதிக்கம் பெறுவதற்காகப் போராடி வரும் அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்கு, அமெரிக்காவின் கூட்டாளிகளது ராணுவங்களைப் பயன்படுத்திக்கொள்ளவும், அமெரிக்க ஏகாதிபத்திபத்துக்கு அவை உதவுமாறு நிர்ப்பந்திக்கவும் அமெரிக்கா இந்த உதவியைப் பயன்படுத்தி வருகிறது,

## பிள்ளையார்பிடிக்க குரங்காய் முடிந்த கதை

# குத்தகைதாரருக்கு நிலம் இல்லை பதிலாக நிலவெளியேற்றம் கிடைக்கிறது

விழுப்புரம், ஏப். 20— "தமிழக அரசு சாகுபடியாளர் நில உரிமை மசோதா" தமிழக சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்டு, அதன்மீது நடந்த விவாதத்திற்குப் பதிலளித்த ரெவின்யூ அமைச்சர் திரு. ப. உ. சண்முகம் சாகுபடிதாரர் பதிவு செய்து கொள்ளவில்லையென்றால் சட்டமன்ற உறுப்பினரைக் கொண்டோ, பக்கத்து நிலத்துக்காரர் சாட்சியத்தைக் கொண்டோ பதிவு செய்துகொள்ளலாமென்றும், பதிவுப்புத்தகம் திறந்து உள்ளது என்றும் கூறியுள்ளார்.

நிலஉடைமைக்காரர்கள், சாகுபடிகாரர்களுக்கு குத்தகைச்சீட்டு எழுதிக்கொடுக்காதபோது நிலைமையில்— கிராமக்கணக்கர் சாகுபடிதாரர் சாகுபடி செய்யும் நிலத்தைக்கூட "சொந்தச் சாகுபடி" என்று மாமூலாக குறித்துத்தருகின்ற நிலைமையில் — சாகுபடிதாரர்களை நிலத்தைவிட்டு வெளியேற்றுதல் தடுக்கும் நோக்கத்துடன் கொண்டுவரப்பட்டதே இந்த பதிவுச் சட்டம்.

### அதிகாரிகளின் போக்கு

பதிவுத் தாசில்தார்கள் சாகுபடிகாரர் பதிவு மனு பரிசீலனைக்கு வரும்போது— கிராம கர்ணம குறிப்பிட்ட நிலத்தை சாகுபடிதாரர் பெயரில் அடங்கலில் எழுதாமல் மாமூலாக சொ. சா (சொந்தச் சாகுபடி) என்று எழுதியுள்ளதை பயன்படுத்திக்கொண்டு நிலஉடைமையாளருக்குச் சாதகமாக அவர்கள் சொல்லும் பொய்யான தகவலை ஆதாரமாகக் கொண்டு பதிவு மனுவைத் தள்ளுபடி செய்துவிடுகின்றனர். இதனால் நில வெளியேற்றம் நடக்கிறது. நில வெளியேற்றத்தைத் தடுக்க கொண்டு வரப்பட்ட சட்டம் நில வெளியேற்றத்திற்கே பயன்படுகிறது.

### நூற்றுக்கணக்கானோர்

விழுப்புரம் தாலுகாவில் கண்டமானடி, வீராணம், செங்கம்பட்டு போன்ற கிராமங்களில் உள்ள சாகுபடிதாரர்கள், பதிவு மனு போட்டதின் பலனாக நூற்றுக்கணக்கானோர் வெளியேற்றப்பட்டுள்ளனர்.

வெளியேற்றப்பட்ட விவசாயிகள் நியாயம் கிடைக்க கோரி பதிவுத் தாசில்தார், பதிவு உதவிக் கலெக்டர், மாவட்ட ஆட்சித் தலைவர் ஆகியோரிடம் மனுக்கள் பல கொடுத்தும் பலனில்லை, ஆர் டி ஓ விடம் 145 தடை உத்தரவுகள் வாங்கிக் கொடுத்தும் சாகுபடிதாரர்கள் நிலத்திலிருந்து வெளியேற்றப்படுவது நிறுத்தப்படவில்லை. தொடர்ந்து நில வெளியேற்றம் நடக்கிறது.

### அமைச்சர் அறிவிப்பும் நடைமுறையும்

அதிகாரிகள் தவறு செய்தால் தடுக்கமுடியுமென்றும் சட்டமன்ற உறுப்பினர், பக்கத்து நிலத்துக்குரியவர்கள் உதவிகொண்டு சாகுபடி நிலங்களை பதிவு செய்துவிடலாமென்றும் அமைச்சர் சட்டமன்றத்தில் கூறியுள்ளார்.

ஆனால் நடைமுறையில் கர்ணமும் உதவிதாசில்தாரும், சம்பந்தப்பட்ட ஏனைய அதிகாரிகளும் சாகுபடிதாரர்களை நிலத்தை விட்டு வெளியேற்ற, நில உடைமையாளர்களுடன் கைகோர்த்து நிற்பதைத்தான் சாகுபடிதாரர்கள் இன்று காண முடிகிறது.

### இன்றைய கேள்வி

சாகுபடி செய்யும் நிலம் சாகுபடி செய்பவருக்கு பதிவு செய்யப்பட்டு நிலத்தை விட்டு வெளியேற்றுமலிருந்தால் தானே அதை அவர் சொந்தம் செய்து கொண்டு, தவணை முறையில் அதற்குரிய பணத்தைத் கட்டி மேலே கூறப்பட்ட சட்டத்தினால் பயன்பெற முடியும்.

எனவே 'பதிவுச் சட்டம் அமுல்' என்ற பெயரில், நில வெளியேற்றம் தான் பெரிய அளவில் நடந்து வருகிறது "இந்த ஆபத்திலிருந்து சாகுபடிதாரர்களைப் பாதுகாக்க தமிழக அரசு முதலில் நடவடிக்கை எடுக்குமா?" என்பதே குத்தகை, வார விவசாயிகளின் முன் இன்று எழுந்துள்ள கேள்வியாகும்.

# ஈரோடு சுருட்டுத் தொழிலாளர் கூலி உயர்வு பெற்றனர்

ஈரோடு, ஏப். 20— இங்குள்ள சுருட்டுத்தொழிலாளர்கள் அனைவரும், ஈரோடு தாலுகா சுருட்டுத தொழிலாளர் சங்கத்தின் கீழ் அணிதிரண்டு தங்களது ஒற்றுமையை வலுப்படுத்தியதின் காரணமாக கூலி உயர்வு பெற்றனர்.

உயர்ந்துவரும் விலைவாசி, வரிவிதிப்பு முதலிய கொடுமைகளில் பாதிக்கப்பட்டுள்ள சுருட்டுத் தொழிலாளர்களுக்கு கூலிஉயர்வு அளிக்கவேண்டும் என்று சுருட்டு உற்பத்தியாளர்களிடம் சங்க நிர்வாகிகள் பலமுறை வற்புறுத்தியதன் காரணமாக ஏப் 8-ந்தேதி பேச்சு வார்த்தை நடந்தது

ஒற்றை ஏடு ரக சுருட்டு 1000 சுற்றும் தொழிலாளர்களுக்கு 65 பைசா முதல் ரூ 1-25 வரையும்—இரட்டை ஏடு ரக சுருட்டு 1000 சுற்றும் தொழிலாளர்களுக்கு ரூ 1 முதல் ரூ 2 வரையும் கூலிஉயர்வு வழங்கசுருட்டு உற்பத்தியாளர்கள் ஒப்புக் கொண்டனர்.

அரசாங்க விடுமுறை பண்டிகை லீவுநாட்களுக்கு (ஆண்டுக்கு 9 தினங்களுக்கு) நாள் ஒன்றுக்கு ரூ 5 வீதம் சம்பளம் வழங்கப்படும்,

இந்த ஒப்பந்தத்தில் தொழிற்சங்கம் சார்பில் தலைவரும் செயலாளரும் கையொப்பமிட்டனர்.

உற்பத்தியாளர்கள் சார்

(8 பத்தி பார்க்க)

### நிர்வாகிகள் தேர்வு

கோவை, ஏப். 20— கோவை மாவட்ட மில் தொழிலாளர் சங்க உடுமலை கிளை மகாசபை ஏப். 7-ல் பிரிமியர் மில் கமிட்டி அலுவலகத்தில் தோழர் எஸ் செண்னியப்பன் தலைமையில் நடைபெற்றது. தலைமைச் சங்கத்தின் தலைவர் தோழர் எம பூபதி தோழர் கே. எஸ். கருப்புசாமி ஆகியோர் கலந்து கொண்டு இன்று நாட்டில உள்ள நிலைமைகளையும், சி ஐ டி யூ வின் வளர்ச்சிகளையும், மிகத் தெளிவாக எடுத்துரைத்தனர்.

கிளை செயலாளர் தோழர் என். வெங்கிடாசலம், 1972-ம் வருட ஆண்டு அறிக்கை வாசித்தார். உடுமலைப்பகுதியில் உள்ள நிலைமையை விளக்கிக் கூறினார். பின்னர் கிளைச் சங்க நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்றது. உடுமலை கிளைச சங்க நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்கள் 19 பேர் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டனர். உடுமலை கிளைச் சங்க செயலாளராக தோழர் ஆர். பார்த்தசாரதி தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### நாம்பென்னைச்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பென்னில் உள்ள பொம்மை அரசின் படைகளுக்கு எரிபொருள், உணவு, நீர் ஆகியவை கொண்ட அமெரிக்கக் கப்பல்களும், தென்வியட்நாம் பொம்மை அரசின் கப்பலகளும் செல்லவிடாது தடுக்கப்பட்டுள்ளன.

இதனால் வெறிகொண்ட அமெரிக்க ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பாளர்கள் நம்பென்னைச் சுற்றி 7 கி. மீ. முதல் 13 கி. மீ. தொலைவு வரைக்கும் உட்பட்ட பகுதிகளில் விமானங்கள் மூலம் கடுமையான குண்டு வீச்சுத் தாக்குதலை நடத்தி வருகின்றன.

### உ. பி. தலைவர் தோழர் ராம்ஆஸ்ரே மறைவு

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் உத்திரபிரதேச மாநிலக் கமிட்டி உறுப்பினரும், கான்பூரில் உள்ள சி ஐ டி யூ தொழிற்சங்கங்களின் தலைவருமான தோழர் ராம் ஆஸ்ரே அவர்கள் கடந்த ஏப்ரல் 11 ஆம் தேதி மாரடைப்பு காரணமாக காலமானார் என்ற செய்தியை மிகவும் வருத்தத்துடன் தெரிவிக்கிறோம்.

மார்க்சிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ சார்பாக அனுதாபம் தெரிவித்து உத்தரப்பிரதேச மாநிலக் கமிட்டிக்குதோழர் ஜோதிபாசு அனுப்பியுள்ள செய்தியில் தோழர் ராம் ஆஸ்ரேயின் திடீர் மறைவு கேட்டு அதிர்ச்சி அடைந்ததாகவும், முக்கிய தொழிற்சங்கத்தலைவரை கட்சி இழந்து விட்டது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

### எட்டையபுரத்தில் நெசவுத் தொழிலாளர் சங்கம் அமைப்பு

எட்டையாபுரம், ஏப். 19— எட்டயாபுரத்தில் ஏப். 6-ல் கூலி நெசவுத் தொழிலாளர் சங்க அமைப்புக் கூட்டம் தோழர் கு. குருநாதன் தலைமையில் நடைபெற்றது.

மதுரை மாவட்டத்தில் தறி இல்லாத நெசவுத் தொழிலாளர்களுக்கு அவர்கள் தறி வாங்குவதற்கு நபர் ஒன்றுக்கு 40 மாதத் தவணையில் ரூ. 600 கட்டுறு கொடுக்கப்பட்டதென மதுரை கலெக்டர் அறிவித்து இருப்பதால், அதைப்போல நெல்லை மாவட்ட நெசவுத் தொழிலாளர்களுக்கு கொடுக்கப்படவேண்டும் என நெல்லை மாவட்ட கலெக்டரை கோருவது எனவும், அதற்கான நடவடிக்கைகளை எடுப்பதெனவும் இக்கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது,

மேலும், இக்கூட்டத்தில் இவ்வாண்டுக்குரிய தலைவராக அய்யனும், உப தலைவராக ஆ கந்தசாமியும், செயலாளராக எஸ். சோலையப்பனும், உதவிச் செயலாளராக அ. பிச்சாண்டியும் பொருளாளராக கு. குருநாதனும், 11 பேர் அடங்கிய நிர்வாகக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது,

# மீண்டும் விவசாயிகள் சங்கத்தில் சேர்ந்தனர்

மன்னார்குடி, ஏப், 20— மன்னார்குடி தாலுகா சத்திரையூர் என்ற கிராமத்தில் கடந்த மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் விவசாயிகள் சங்கத்திலிருந்துபிரிந்து சென்ற இருபது குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தில் இயங்கி வந்தார்கள்.

தற்சமயம் அதனுடைய கொள்கையும், நடைமுறையும் பிடிக்காத காரணத்தினால் கடந்த மூன்று ஆண்டு காலமாக தாங்கள் நேரடியாக அனுபவித்துப் பார்க்கும்பொழுது அதனுடைய கொள்கை நிலப்பிரபுத்துவத்திற்கும் முதலாளித்துவத்திற்கும் சாதமாக உள்ளதை அனுபவ பூர்வமாக உணர்ந்ததாலும் தாங்கள் திமுகழகத்திலிருந்து விலகிவிட்டதாக அறிவித்துள்ளனர்.

உண்மையிலேயே விவசாயிகளுக்கும், தொழிலாளர்களுக்கும், பாடுபட்டு வரக்கூடிய வர்க்க ஸ்தாபனமான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் அதன் தலைமையில் உள்ள விவசாயிகள் இயக்கமும்தான் என்பதை உணர்ந்து இன்று முதல் விவசாயிகள் சங்கத்தில் சேர்ந்து செயல்படுவது என அவர்கள் உறுதி கொண்டுள்ளார்கள்.

அவர்களைப் பாராட்டி சித்திரையூர் ஊராட்சி மன்ற தலைவர் தோழர் ரெங்கன் தலைமையில் நடந்த கூட்டத்தில் தாலுகா விவசாயத் தொழிலாளர் சங்க கமிட்டி உறுப்பினர் தோழர் பெரியசாமி தாலுகா விவசாய தொழிலாளர் சங்க செயலாளர் தோழர் ஏ.கே.கணேசன் ஆகியோர் கலந்து கொண்டார்கள்.

### நெல் மூடைகள் மேலும் அபேஸ் 4400 நெல் மூடைகள் காணோம்

விழுப்புரம், ஏப். 19— தென் ஆற்காடு மாவட்டத்தில் திண்டிவனத்தில் உள்ள அரசு நெல் கிடங்கில் 4400 நெல் மூடைகள் காணாமல் போய்விட்டது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஏற்கனவே, வளவனூரில் உள்ள அரசு நெல் கடங்கில் 8799 நெல் மூட்டைகள் திருடு போனது சம்பந்தமாக பரிசோதனை நடத்திய போதே இந்த உண்மை கண்டு பிடிக்கப்பட்டது. காணாமல் போன இந்த நெல்லின் மதிப்பு ரூ 2,20,600 ஆகும்.

இந்த அரசு நெல் கிடங்கு கடந்த பிப்ரவரி மாதம் இறந்து போன ஜெகதீசன் என்னும் வியாபாரியின் பொறுப்பில் இருந்ததாம். தற்போது அவரது சகோதரர்களின் பொறுப்பில் உள்ளதாம், இந்த விபரம் உயர் அதிகாரிகளுக்கு நெல் மூட்டைகள் களவு போன பிறகே தெரியுமாம்.

## பாம்பம்பட்டி விவசாயத்தொழிலாளர்களை விடுதலை செய்

# பழனி தாலுகா ஆபீஸ் முன்பு ஆவேசமிக்க ஆர்ப்பாட்டம்

பழனி, ஏப். 20— பழனியில், பாப்பம்பூர், காவளபட்டி, நெய்கனரபட்டி, தாமரைக்குளம், கலையம்புத்தூர், சி-கலையம்புத்தூர், பழனி, ஆயக்குடி, கணக்கன்பட்டி, மஞ்சை சத்திரபட்டி, சாமியார் புதூர், ஒட்டன்சத்திரம் ஆகிய இடங்களிலிருந்து, 50க்கு மேற்பட்ட பெண்கள் உள்பட சுமார் 500 பேருக்கு மேல், அரசு மருத்துவமனை முன்பிருந்து நகரின் முக்கிய வீதிகள் வழியாக ஏப்ரல் 16ல் ஊர்வலமாக வந்தனர்.

பாப்பம்பட்டியில், கைது செய்யப்பட்ட 91 விவசாய தொழிலாளர்களை விடுதலை செய்!

நிலஉச்சவரம்பு சட்டத்தை மீறிய அதிகாரிகள் மீது நடவடிக்கை எடு!

எஸ், எஸ். ராஜனின் கையாளான உச்சவரம்பு ரெவின்யூ இன்ஸ்பெக்டர் மீது நடவடிக்கை எடு!

அடங்கலில் பொய்க் கணக்கு எழுதிய ஆண்டிபட்டி கர்ணம் மீது— நடவடிக்கை எடு

ஜாதிக் கலவரத்தை தூண்டிவிட முயற்சித்த சப்இன்ஸ்பெக்டர் சாமிவேல் மீது— நடவடிக்கை எடு

விவசாயிகளை சுட வந்த வெடிக்கரை கருப்பணனை —கைது செய்

உபரி நிலத்திற்கு மனு போட்ட விவசாயிகளுக்கு நிலத்தை — பங்கிட்டுக் கொடு. என உணர்ச்சி பொங்க கோஷமிட்டு வந்தனர்.

தாலுகா ஆபீஸ் முன்பு 15 நிமிடம் ஆர்ப்பாட்டம் நடந்தது ஹெட் கோட்டர் தாசில்தாரிடம், மனு கொடுக்கப்பட்டது. பின் ஊர்வலமாக சென்று பொதுக் கூட்டத் திடலை அடைந்தது. தோழர் என். சுப்புராயலு தலைமையில் பொதுக் கூட்டம் நடந்தது.

ஆண்டிபட்டி கிராமத்தில் எடுக்கப்பட்ட, எஸ்; எஸ். ராஜனின் நிலங்களைப்பற்றியும், இந்த நிலங்களை எடுக்கும் போது இதுவும் கிடைக்காமல் செய்ய முயற்சித்தனர். நிலச்சுவான்தாரின் சட்டவிரோத நடவடிக்கை பற்றியும், நில உச்சவரம்பு ரெவினியூ இன்ஸ்பெக்டர் ராஜனின் கையாளாக செயல்பட்டதையும் உபரி நிலம் என அறிவிக்கும் போது, குத்தகைதாரர் இல்லை. என்று கூறிவிட்டு பின்னர் ஆண்டிபட்டி கர்ணம் அடங்களில், பொய்யாக பதிவு செய்ததைபற்றியும் தாறனே போலீஸ் சப் இன்ஸ்பெக்டரின் நிலப்பிரபுத்து ஆதார தன்மைமை பலமாக கண்டித்தும், நிலத்திற்காக போராடி சிறையில் வாடும் 91 விவசாய தொழிலாளிகளை. விடுதலை செய்ய வேண்டுமென்றும், வழக்குகளை வாபஸ் வாங்க வேண்டுமென்றும், உச்சவரம்பு சட்டத்தை மீறிய அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கோரினர்.

தோழர்கள் வி ஏ கருப்பசாமி, ஏ எஸ் காளிமுத்து, ஏ கே சாதல் அமீது, ஏ சிலுவைமுத்து ஆகியோர் பேசினர்.

### பழனி தாலுகா அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம் மறியலும் செய்ய முடிவு

பழனி, ஏப் 19— பழனி தாலுகா அலுவலகம் முன்பு ஏப் 17 முதல் 24 வரை தொடர்ந்து ஆர்ப்பாட்டங்கள் நடக்கின்றன. பாப்பம்பட்டி கிராம நிலப் போராட்டத்தில் கைது செய்யப்பட்டுள்ள விவசாயத் தொழிலாளர்களை விடுதலை செய்யக் கோரியும். அவர்கள் மீது போடப்பட்டுள்ள வழக்குகளை வாபஸ் பெறக் கோரியும், உபரி நிலம் கோரி மனுப்போட்டுள்ள பாப்பம்பட்டி விவசாயத்தொழிலாளர்களுக்கு நிலம் வழங்கக் கோரியும் இந்த ஆர்ப்பாட்டங்கள் நடக்கின்றன.

இந்த ஆர்பாட்டங்களில் ஏ கலயம்புத்தூர் தாமரைக் குளம், நெய்க்காரப்பட்டி, காவளப்பட்டி. கோம்பைப் பட்டி, கணக்கன்பட்டி பாலசமூத்திரம், சிகலையம்புத்தூர் பழனி முதலிய பகுதிகளிலுள்ள விவசாயத் தொழிலாளர்களும், மற்ற பகுதி உழைப்பாளர்களும் ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள்,

ஏப் 25ந் தேதி முதல் ஒரு நாளைக்கு 5தோழர்கள்வீதம் தொடர்ந்து மறியல் போராட்டத்தில் ஈடுபடுவார்கள்.

### திருத்துறைப்பூண்டி தாலுகாவில் மார்க்சிஸ்ட் இளைஞர் முன்னணி அமைப்பு

திருத்துறைப்பூண்டி, ஏப். 20— தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி தாலுகாவில் பல இடங்களில் மார்க்சிஸ்ட் இளைஞர் முன்னணி குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

ஆவத்தம்பாடி, கொத்தங்குடி, ஆய்யூர், தொழுதூர், சித்தாய்மூர், கீரபலூர், சச்சனம், காகம், பாமந்தூர், கச்சநகரம், முத்தாசபுரம் வடக்கு, முத்தாசபுரம் தெற்கு, பாங்கல, உத்திரங்குடி, பணங்காடி முதலிய இடங்களில மார்க்சிஸ்ட் இளைஞர் முன்னணி அமைப்புகுழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

இந்த முன்னணியின் தாலுகாச் செயலாளர் தோழர் வி, ராமதாஸ் பி. எஸ். சி, அண்மையில் இந்த இடங்களுக்குச் சென்று இந்த அமைப்புக் கூட்டங்களை நடத்தினர்.

# பொன்னமராவதி நெசவாளர்கள் எழுச்சி

பொன்னமராவதி ஏப் 20— திருமயம் தாலுகா பொன்னமராவதி நெசவாளர்கள் ஏப் 14-ந் தேதி பஞ்சாயத்து யூனியன் அலுவலகம் முன் பெரும் ஆர்ப்பாட்டம் ஒன்றை நடத்தினர். இந்த ஆர்ப்பாட்டத்துக்கு தோழர் கே சின்னையா தலைமை வகித்தார்.

தொழிலாளர்களுக்கு நேரடியாக நூல்கார்டு வழங்குதல், சொந்தத்தில் தறி வாங்க கடன் வசதி, தறி அமைக்கவும், குடி இருக்க வும் மனைக்கட்டு, 60 நம்பர் நூலுக்கு ஜெம் 1க்கு 20 காசும், 40நம்பருக்கு ஜெம் 1க்கு 15காசும் கூலி உயர்வு முதலிய கோரிக்கைகளை வலியுறுத்தி இந்த ஆர்ப்பாட்டம் நடந்தது

இந்த கோரிக்கைகள் குறித்து ஏற்கனவே திருமயம் தாசில்தார், மாவட்ட கலெக்டர், திருச்சி உதவி இயக்குநர் ஆகியோர்களை பேட்டி கண்டு கோரிக்கை மனுக்கள் கொடுத்தும் எவ்வித நடவடிக்கையும் மேற்கொள்ளப்படவில்லை.

### பாத யாத்திரை

எனவே, நெசவாளர்கள் அனைவரும் தமது நியாயமான கோரிக்கைகளைப் பெற்றிட எழுச்சியுற்றுள்ளனர் திருமயம் தாலுகாவைச் சேர்ந்த நெசவுத் தொழிலாளர்கள் சங்கத்தின் கீழ் அணி திரண்டுள்ளனர்.

ஏப் 26ந் தேதியன்று தோழர்கள் டி ஏ வெங்கடாசலம், எம் கே மல்லையா செட்டியார் ஆகியோர் தலைமையில் காலை 8மணிக்கு பொன்னமராவதியிலிருந்து பாத யாத்திரை புறப்பட்டு வழிநெடுக பிரச்சாரம் செய்து கொண்டு புதுக் கோட்டை அடைவார்கள்.

அங்கு ஏப் 27-ந் தேதி யன்று பகல் 11 மணியளவில் புதுக்கோட்டை சப் கலெக்டர் அலுவலகம்முன் பெரும் ஆர்ப்பாட்டம் நடத்தப்படும். இந்த ஆர்ப்பாட்டத்துக்கு தோழர் பெரி. குமாரவேல் தலைமை வகிப்பர்.

பின்னரும் கோரிக்கைகள் நிறைவேற்றப்படாவிடில். தொடர் உண்ணாவிரதம் மேற்கொள்ளவும் நெசவாளர்கள் முடிவு செய்துள்ளனர்

### மூங்கில் துறைப்பட்டு கூட்டுறவு சர்க்கரை ஆலைதொழிலாளர் போராட்ட நிதி வசூல்

| | | ரூ. பை |
|---|---|---|
| ஏற்கனவே தீக்கதிரில் பிரசுரிக்கப்பட்ட தொகை | ... | 341—08 |
| ஐக்கிய நெசவுத் தொழிலாளர் சங்கம், மதுரை | ... | 5—00 |
| சி. ஐ. டி. யூ-வின் மதுரை, முகவை மாவட்டக்குழு சார்பில் நடந்த பொதுக்கூட்ட வசூல் | ... | 13—81 |
| எமனேஸ்வரம் பொதுக்கூட்டவசூல் | ... | 5—00 |
| ஆர். பார்த்தசாரதி கிருஷ்ணபுரம் | ... | 5—00 |
| கோத்தாரி சர்க்கரை ஆலை தொழிலாளர் சங்கம், காட்டூர், திருச்சி மாவட்டம் | ... | 25—00 |
| கோவை மாவட்ட ஜெனரல், இன்ஜீனியரிங் மெக்கானிகள் தொழிலாளர் சங்கம் | ... | 15—00 |
| எல். ஐ. சி. ஊழியர்கள் (மதுரை) | ... | 10—00 |
| பஞ்சாலைத் தொழிலாளர்கள் சங்கம் தாராபுரம், கோவை மாவட்டம் | ... | 10—00 |
| சென்னை, அம்பத்தூர் டி. ஐ. சி. தொழிலாளர் சார்பில் | ... | 10—00 |
| ஆஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தொழிலாளர் சங்கம் சி. ஐ. டி. யூ. மேட்டூர் போத்தனூர் | ... | 5 00 |
| அய்யலூர் நூற்பு ஆலைத்தொழிலாளர் சங்கம் (சி. ஐ. டி. யூ). விருதுநகர் | ... | 5—00 |
| மொத்தம் | ... | 449—81 |

### மின் ஊழியர் கூட்டம்

திருநெல்வேலி, ஏப். 20— தமிழ்நாடு மின்சார ஊழியர்கள் சங்கத்தின் திருநெல்வேலியின் கிளைக்கூட்டம் திருநெல்வேலியில் ஏப், 11-ல் நடந்தது, தோழர் டி, பி, வாசுதேவன் தலைமை வகித்தார். திட்டச் செயலாளர் தோழர் வி, கணபதிராமன் கலந்து கொண்டு கூடுதல் நேரப்பணி விஷயமாகவும், அண்மையில் கணக்காயர் சங்கம் மின்வாரியத்துடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை விளக்கியும் பேசினர்.

மின்வாரிய பதவியில் இருந்து தோழர் கணேஷ் ராஜினாமா செய்துவிட்டதனால், அவருக்குப் பதிலாக மத்திய அலுவலக கிளைச் செயலாளராக தோழர் டி சாமுவேல் ஜசக் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மற்றும் மாநில உபதலைவர் தோழர் ஏ, நடராஜன், பொருளாளர் சண்முகம் ஆகியோர் பேசினர்கள். தோழர் வி, கே, ராமகிருஷ்ணன் நன்றியுரை கூற கூட்டம் முடிவுற்றது,

### நாகபுரியில் உணவுக்கலவரம்

நாகபுரி, ஏப். 21— உணவும் நெசவாளருக்கு நூலும் கிடைக்காததால் மகாராஷ்டிரத்தில் குறிப்பாக நாகபுரியில் பல இடங்களில் உணவுக் கலவரங்கள் நடந்து வருகின்றன. பல கடைகளை உடைத்து மக்களே உணவை வினியோகித்து வருகின்றனர்.

கடைகளிலுள்ள நூலை தேவைப்பட்டோருக்கு வினியோகம் செய்கின்றனர். அரசாங்கம் தன் கடமையைச் செய்யத் தவறியதால் இந்த நிலைமை ஏற்பட்டுள்ளது.

(2ம் பத்தித்தொடர்ச்சி)

பில் லேடி மார்க் சுருட்டு, தாமரை மார்க் சுருட்டு, முருகவிலாஸ், எஸ், மணி மார்க், சர்ப்ப புலி மார்க், பார்வதி விலாஸ் ஆகிய சுருட்டுக் கம்பெனி அதிபர்கள் கையொப்பமிட்டனர்,

இந்தஒப்பந்தம் இத் தாலுகாவில் உள்ள 17 சுருட்டு கம்பெனிகளுக்கும் பொருந்தும் என்றும், ஏப் 9 முதல் அமுலாகிறது என்றும் அறிவிக்கப்பட்டது.

## சினிமா விமர்சனம் — வாயாடி

உண்மை பேசும் ஒரு உழைப்பாளிப் பெண் (கே. ஆர், விஜயா) வேலைக்குச் சென்ற இடத்தில் எல்லாம் தகராறு.

பணக்கார மேல்தட்டுக் குடும்பங்களின் அசிங்கமான போக்குகளுடன் இணைந்து செல்லாமல், அவர்களுக்கு நேர்மையான வழியைச் சொல்லுவதால் எங்கு சென்றாலும் அவளுக்கு வாயாடிப்பட்டம். எனவே வேலையும் நிலைப்பதில்லை.

இறுதியில் ஒரு மேட்டுக்குடி மண்டைக்கர்வியின் வீட்டில் வேலை செய்கிறாள். அவளுடைய (வி, கே ராமசாமி) மகனுக்கு (ஜெய்சங்கர்) அவள் மீது ஆசை. அவளைச் சுற்றிச் சுற்றி வருகிறான்.

"இந்தப் பாரு ஐயா! நாங்க உழைக்கிறவங்க தான். ஆனால் எங்களுக்கும் தன்மானமுண்டு. மரியாதையாக நடந்துக்க" என்று சுடச்சுட அவனுக்குப் பதில் கொடுக்கிறாள்.

அவளை அவன் திருமணம் செய்ய ஒப்புக்கொள்ளும்போதுதான், அவனை நம்புகிறாள். பணக்காரத் தந்தை எதிர்த்தபோதிலும் இறுதியில் திருமணம் நடைபெறுகிறது.

ஆனால் பணக்கார வீட்டுப் பிள்ளையாச்சே. அவன் பலரகமான சேஷ்டைகளிலே கேளிக்கைகளிலே ஈடுபடும்போது, கொலை வழக்கில் சிக்கிக் கொள்கிறான் அதிலிருந்து அவனை மீட்கிறாள் அந்த வேலைக்கார மருமகள்

சில குறைகள் இருந்தாலும் கதை விறுவிறுப்பாகவும் நம்பும்படியாகவும் அமைந்துள்ளது.

வேலைக்காரியாக நடிக்கும் கே. ஆர். விஜயாவின் நடிப்பு அபாரம். அவர் பேசிடும் ஒவ்வொரு வார்த்தையிலும் நீதி மன்றத்தில் வாதாடும் போதும் நேர்மையும், பணக்காரக் கூட்டத்தின் அக்ரமங்களை நயமாகவும் உறுதியாகவும் எதிர்க்கும் பாங்கும் ரசிக்கத் தக்கவை.

அவள் வேலைபார்க்கும் பாக்டரியில் அயோக்கியத்தனம் செய்யும் மானேஜரை வெளியேற்றும்போது, பாடும் பாட்டும், நடனமும் நன்றாக இருந்த போதிலும் அங்க இடத்திற்கு பொருத்தமில்லாமல் அமைந்துள்ளன.

'நெற்றியில் சிகப்பு நிறப்பொட்டும், கையில் சுருக் கருவாளும் எங்களது உழைப்பின் சின்னம்' என்று பாடும்பாட்டு நல்ல முறையில் உள்ளது ஆனால் வேலை நீக்கம் செய்யப்பட்ட ஒரு போக்கிரி மானேஜரை இப்படித்தான் பாட்டுப்பாடி, டான்ஸ் ஆடி விரட்டுவார்களா? இந்நிழ்ச்சியை இன்னும் நம்பும் வகையில் யதார்த்த முறையில் அமைத்திருக்கலாம்.

நல்லக்கருத்துடன், இயற்கையான ஹாஸ்யத்துடன் வசனங்கள் அமைந்துள்ளன.

கே, ஆர். விஜயாவின் விறுவிறுப்பான நடிப்பிற்கு மெருகூட்டும் வகையில் ஜெய்சங்கர், மேஜர் சுந்தரராஜன், வி. கே ராமசாமி, சோ ஆகியோரின் நடிப்புகளும் உள்ளன,

நடிகர்களின்நல்லநடிப்பும் யதார்த்த வாழ்க்கையுடன் ஒட்டிய நம்பக்கூடிய கதையும் டைரக்டரின் திறமையும் இணைந்தால் படம் வெற்றிபெறும் என்பதற்கு இது ஒரு உதாரணம்.

டைரக்டர், கதை வசன கர்த்தா மதுரை திருமாறனுக்கு இப்படம் நல்லபெயர் தரும்,

—விமர்சகன்